இக் கைகள் எவ்வளவு திறம்பட
வேலைகள் செய்கின்றன ஆனால்



... திறனுள்ள கைகள் கூட
அழுக்கடைகின்றன !

அழுக்கடைந்த கைகள்
**மறைந்திருக்கும்**
**அபாயத்தைத்**
தாங்குகின்றன !




அழுக்கில் கண்களுக்கு
புலப்படாத கிருமிகள் இருப்பதால்!

லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது !

L 178-50 TM



"என் கிராமத்தில் விரோதி மலேரியாவை நாங்கள் வீழ்த்தி விட்டோம். இதற்கு உதவியது பாலுட்ரின்……

மலேரியாவைப்பற்றி எங்களுக்கு இனி பயமேயில்லை. எங்கள் கிராமத்திலே அது மிகவும் பயங்கரமான கஷ்டங்களைக் கொடுத்து வந்தது. ஆனால் ஒரு காலைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை வீதம் 3 நாட்கள் உட்கொண்டால் மலேரியாவைக் குணப்படுத்தும் என்பது இப்போது எங்களுக்குத் தெரிந்துவிட்டது. மலேரியா வராமல் தடுக்க வாரம் ஒரு மாத்திரை உட்கொள்ளவேண்டும் என்பதையும் நாங்கள் அறிவோம்".

ஒரு காலைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை வீதம் (ஆகாரத்திற்குப் பிறகு தண்ணீருடன்) 3 நாட்கள் உட்கொண்டால் சாதாரணமாக மலேரியா பாதிப்பு அகலும். வாரம் ஒரு மாத்திரை வீதம் உட்கொள்ளுவதனால் புதியதாக மலேரியா தொத்துவதினின்றும் தடுக்கச் செய்யும். பின்விளைவோ வேறும் விரும்பத்தகாத கோளாறுகள் ஏதும் இல்லாதது 'பாலுட்ரின்'. பெரியவர்கள், குழந்தைகள், கர்ப்பிணி ஸ்திரீகள் யாவரும் முழு நம்பிக்கையுடன் உட்கொள்ளலாம். ஒரு மாத்திரை விலை ஒரு அணா. 'பாலுட்ரின்' 8 அணாவுக்கு 8 மாத்திரைகள் அடங்கிய தாள்களில் கிடைக்கும்.



# 'பாலுட்ரின்'

மலேரியாவுக்கு அற்புதமான ஔஷதம்.

குணத்தின் ICI சின்னம்

இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்,

கல்கத்தா பம்பாய் சென்னை கொச்சி புதுடில்லி கான்பூர்.

ICI 3 TM




# மலிவாக சீக்கிரமாக சுலபமாக

## அக்ரிகோ மண்வாரிகளை உபயோகியுங்கள்

விவசாயிகள், சுரங்கம், இருப்புப்பாதை முதலியவைகளில் வேலைசெய்பவர்கள், ரஸ்தாக்களை அமைப்பவர்கள் இவர்கள் யாவரும் டாடா அக்ரிகோ மண்வாரிகளையே விரும்புகிறார்கள். விசேஷமான ஹைகார்பன் எஃகால் தயாரிக்கப்பட்ட இம்மண்வாரிகள் நீடித்துழைக்கக் கூடியவையாதலால் இவைகளே கடைசியில் மிகவும் சிக்கனமானவை. உயர்தரமான அமைப்பு உள்ளவையாதலால் இவை கையாளுவதற்கு மிகவும் சுலபமாக இருக்கின்றன. ஆகையால்தான் அவை உங்களுடைய வேலையையும், நேரத்தையும் மிச்சப் படுத்துகின்றன.

## டாடா அக்ரிகோ கருவிகள்

கிளை ஆபீஸ்கள்: பம்பாய், மதராஸ், கான்பூர், ஜலந்தர், நாக்பூர், விஜயநகரம், ஸெகிந்திராபாத்.

**நீடித்த மலிவான உழைப்புக்காக அக்ரிகோ கருவிகளையே வாங்குங்கள்.**


உங்கள் குழந்தைக்கு
பதிவாக 'கிளாக்ஸோ'
கொடுங்கள்.
இப்பொழுது தடையின்றி
..கிடைக்கிறது..
Glaxo
குழந்தைகளுக்கான
பால் உணவு
"ஓ... அம்மா,
ஏராளமாக
கிடைக்கிறது
கிளாக்ஸோ"
நிர்ணயிக்கப்பட்ட சில்லறை விற்பனை விலை: 1 பவுண்டு டின் ரூ. 3-2-0; 2 பவுண்டு டின் ரூ. 5-15-0
கிளாக்ஸோ லெபரெட்டரீஸ் (இந்தியா) லிட்.
பம்பாய். கல்கத்தா. மதராஸ்.




அவனைவிட வேறொரு மாணவனும் அவ்வளவு அக்கரையாகப் பரீக்ஷையில் தேறுதலேயோ, அல்லது அதிகம் உழைக்கவோ இல்லை. அடிக்கடி பரீக்ஷையில் தோல்வி மேலும் அதிக நேரம் புத்தகங்களுடன் கழிக்கவே தாண்டிற்று. அதில் யாதொரு பிரயோசனமும் இல்லை. படிப்பில் கவனம் செலுத்தவோ அல்லது விஷயங்களை மனதில் வைக்கவோ முடியவில்லை. இவ்வாறு மனமுடையும் தருணத்தில்தான் ஒரு நண்பன் "க்ருஷனை"ச் சிபார்சு செய்தனன்......

**மாணுக்கர்கள் மிகவும் தீவிரவாதிகள். ஆனால் கல்வியினும் பெறும் மதிப்பிற்காக தேக நலத்தை இழப்பதென்றால் கல்வியின் நலன்கள் பயனற்றதே. நீண்ட நேரப் படிப்பு, சுத்தமான காற்றும் தேகாப்பியாசமுமின்மை, இவை ஈரல், மூத்திரக்காய், குடல்கள் இவற்றை மந்திக்கச் செய்கின்றன. அதனால் தேங்கியுள்ள அசுத்தங்கள் ரத்த ஓட்டத்தையும் அசுத்தப்படுத்துகின்றன. ஒவ்வொரு அறிவும் பாதிக்கப்படுகின்றது. அநேகமாக முதன்மையாகத் தேறக் கூடியவர்களும் தோற்று மாறு ஏற்படலாம்.**

**தேக உழைப்பின்மையும், நீண்ட நேரம் உட்கார்ந்திருப்பதினாலும் ஏற்படக் கூடிய விஷங்களினால் பாதிக்கப்பட்டால் இன்றே "க்ருஷனை"க் கொண்டு தாக்குங்கள். க்ருஷனிலுள்ள லோக தாதுக்கள் உபாதைகளின் மூல காரணத்தை ஆறு வழிகளில் தாக்குகின்றன. மூத்திரக் காய்கள், ஈரல் குடல்களும் இயற்கையாகவே இயக்கப்படுகின்றன. பரபரப்பு, உற்சாகமின்மை அசவுகரியம், இவை ஒழிந்து ஊக்கமும், உற்சாகமும் திரும்பக் கிடைக்கின்றன. ஒவ்வொரு மனோசக்தியிலும் சரியானபடி ஞாயம் வழங்கப்படுகிறீர்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் "க்ருஷன்" ரூ. 1-10-0க்குக் கிடைக்கின்றது.**

"க்ருஷன்" ஈ. க்ரிபித் ஹியூஸ், லிட்., (மான்செஸ்டர், இங்கிலாந்து) அவர்களால் தயாரிக்கப்பட்டு கார் & கம்பெனி, லிட்., (பம்பாய், மதராஸ் கல்கத்தா) அவர்களால் விக்ரயிக்கப்படுகின்றன.




## நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்

# பொருள் அடக்கம்

கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மலர் 10 இதழ் 28 | 1951 பிப்ரவரி 11 | விக்ருதி ௵ தை ௴ 29௳



“கல்கி”யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# உணவு வேளைச் சங்கடங்கள்?



## அவற்றை இம்முறையில் ஒழியுங்கள்...

"பிஸ்மாக்" எவ்வாறு வலியிலிருந்து நிவாரணம் தருகிறது.

வயிற்றுக் கோளாறுகளுக்கெல்லாம் முக்கிய காரணமான அதிகப்படியான புளிப்பை "பிஸ்மாக்" முதன்முதலில் முறித்துப் பயனற்றதாகச் செய்கிறது. புளிப்பை முறிக்கும் பொருள்கள் துரிதமாகவே வலியிலிருந்து நிவாரணம் அளித்தபின்னர் 'பிஸ்மாக்'கிலுள்ள மற்றுமுள்ள பொருள்கள் தங்கள் வேலையைத் துவக்குகின்றன. ஒன்று அதிகப்படியான புளிப்பு, மேலும் சேருவதைத் தடுப்பது மற்றொன்று வயிற்றினுட்பாகத்து எரிச்சலை சமனப் படுத்திக் குணமளிப்பது

ஆகாரத்திற்குப் பின்னர், உணவு ஜீரணமாகாமல் வயிற்றுக்குள்ளேயே தங்கிப் புளித்துப்போய் ஒவ்வொரு ஆகாரத்திற்குப் பின்னும் தொல்லை அளிக்கிறதா? அப்படியானால் அதனின்றும் நிவிர்த்தியடையும் வழி இது தான். தங்கள் மருந்து வியாபாரியிடமிருந்து "பிஸ்மாக்" வரவழைத்து ஒரு டீஸ்பூன் அளவு (அல்லது 4/5 மாத்திரைகள்) சேர்த்து ஜலத்தோடு உட்கொள்ளவும். அதனால் வயிற்றிலுள்ள அதிகப்படியான புளிப்பு முறிக்கப்பட்டு வயிற்றின் உட்புர எரிச்சலும் தணிக்கப்படுகிறது. ஒவ்வொருவேளையும் ஆகாரத்திற்குப்பின் "பிஸ்மாக்" சில நாளைக்குச் சாப்பிடுவது அதன் நிவாரண வேலையைத் தொடர்ந்து செய்யச் சாத்தியமாகிறது.

**'பிஸ்மாக்'**
**க்ஷணமே அஜீர்ணத்தைப் போக்குகிறது**




மாத்திரைகளாகவும் பவுடராகவும் கிடைக்கும்

இந்தியாவில் தயாரிப்பாளர்கள் :

**ஜியாப்ரே மானர்ஸ் & கோ. லிட்., பம்பாய்-1**
பிராஞ்சுகள் : கல்கத்தா - மதராஸ் - டில்லி

கல்கி

# சபர்மதி தீரத்தில்

ஆமதாபாத் நகரம் இந்திய மக்களுக்கு ஒரு புண்ணிய க்ஷேத்திரம். காந்தி மகாத்மா அந்நகருக்கு அருகேதான் சபர்மதி நதிக் கரையில் சத்தியாக்கிரஹ ஆசிரமத்தை ஸ்தாபித்தார். அங்கிருந்துதான் சரித்திரப் பிரசித்தி பெற்ற டாண்டி யாத்திரையைத் தொடங்கினார். அங்கேதான் தமது சத்திய சோதனைகள் பலவும் செய்தார்.

அத்தகைய நகரில் சபர்மதி தீரத்தில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி கூடியது. காந்தி மகாத்மாவின் ஆத்ம சக்தி இன்னும் அவ்விடத்து வான வெளியில் நிறைந்திருக்கின்றது போலும். ஆகையினால், அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் முடிவுகள் தேசத்துக்கு நல்வழி காட்டும் முறையில் அமைந்திருக்கின்றன.

முக்கியமாக இரண்டு விஷயங்கள் அங்கே ஆலோசிக்கப்பட்டு நிறைவேறின. ஒன்று காங்கிரஸ் மகாசபையின் புனர் அமைப்புத் திட்டம். காங்கிரஸ் அமைப்பில் புகுந்துவிட்ட ஊழல்களை யெல்லாம் பெரும்பாலும் நிவர்த்திசெய்யக் கூடிய முறையில் புதிய திட்டம் அமைந்திருப்பது பற்றி மகிழ்ச்சி அடைகிறோம். லஞ்சத்தினாலும் அடாவடியினாலும் ஒரு கோஷ்டியார் மற்றவர்களைத் தள்ளி விட்டுக் காங்கிரஸ் ஸ்தாபனங்களைக் கைப்பற்றிக் கொள்வது புதிய அமைப் பின்படி அவ்வளவு சுலபமாக இராது.

ஆனால் புதிய காங்கிரஸ் அமைப்பு இப்போது உடனே அமுலுக்கு வரப் போவதில்லை. எப்போது, எப்படி அமுலுக்குக் கொண்டு வருவது என்பது காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு விடப்பட்டிருக்கிறது.

அநேகமாக இப்போதுள்ள காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்கே இந்த வருஷத்து இறுதியில் சுதந்திர இந்தியாவின் பார்லிமெண்டுக்கு நடக்கப் போகும் தேர்தல்களை நடத்தி வைக்கவேண்டிய பொறுப்பு ஏற்படலாம்.

ஆகவே, பழைய அமைப்பின்படி ஏற்பட்ட இப்போதுள்ள காங்கிரஸ் ஸ்தாபனங்களையும் ஓரளவேனும் தூய்மைப்படுத்துவது அவசியம். மாகாண காங்கிரஸ் ஸ்தாபனங்களில் புகுந்துள்ள கோஷ்டி மனப்பான்மையை ஒழித்து, காங்கிரஸ் வாதிகளுக்குள் பூரண ஒற்றுமையை நிலை நாட்டுவது அவசியம். அப்போதுதான், வரப்போகும் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர்கள் மகத்தான வெற்றியை அடைவது சாத்தியமாகும்.

இதை முன்னிட்டே, இரண்டு இதழ்களுக்கு முன்னால், "வெளியேற்று விழா வேண்டாம்!" என்ற தலைப்பில் எழுதியிருந்தோம்.

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானமோ இன்னும் ஒரு அடி முன்னால் சென்று, "வரவேற்பு விழா நடத்துக!" என்று காங்கிரஸ் வாதிகளுக்குக் கட்டளை யிட்டிருக்கிறது.

காங்கிரஸுக்குப் புறம்பே சென்று தனிக் கட்சி ஸ்தாபித்திருக்கும் டாக்டர் பி. ஸி. கோஷ் கோஷ்டியையும், காங்கிரஸுக்குள்ளேயே தனித்து ஜனநாயக முன்னணி ஸ்தாபித்திருக்கும் ஆசாரிய கிருபளானியையும் திரும்பிக் காங்கிரஸிலேயே ஐக்கியமாகும்படி கேட்டிருக்கிறது. அவர்களுடைய குறைகளைக் கேட்டுப் பரிகாரம் தேடுவதற்கும் காங்கிரஸ் தலைவருக்கு அதிகாரம் அளித்திருக்கிறது.

மாகாண காங்கிரஸ் ஸ்தாபனங்களில் 'மெஜாரிட்டி' பலம் பெற்று, சிறுபான்மையோரை உதறித் தள்ளவும் வெளியேற்றவும் முயலும் கோஷ்டிகளையும் அவ்வாறு செய்ய வேண்டாம் என்று சொல்லி யிருக்கிறது. சிறுபான்மையோரையும் சேர்த்துக்கொண்டு ஒத்துழைக்கும்படி கட்டளை யிட்டிருக்கிறது.

இன்னும், காங்கிரஸுக்குப் புறம்பே யுள்ளவர்களில் அறிவாளிகளையும் திறமைசாலிகளையும் சேர்த்துக்கொண்டு அவர்களுடைய சேவையைப் பயன்

படுத்திக் கொள்ளவும் தீர்மானித்திருக்கிறது. இதன் பொருட்டுக் காங்கிரஸின் வாசற் கதவுகளை நன்கு திறந்துவிட்டு ''அனைவருக்கும் நல் வரவு'' என்று கோஷிக்கும்படியும் உத்தரவிட்டிருக்கிறது.

இவையெல்லாம் மிக நல்ல தீர்மானங்கள் என்பதைப் பற்றி அதிகம் சொல்ல வேண்டியதில்லை. எந்த நிமிஷத்திலும் சர்வ தேசிய நெருக்கடி ஏற்படலாம் என்றிருக்கும் உலக நிலைமையில் தேசத்திற்குள் இத்தகைய ஒற்றுமை மனோபாவமும் ஒத்துழைப்புத் திட்டமும் மிக மிக அவசியமாகும்.

ஆனால் எதைப்பற்றி அதிகம் சொல்லவேண்டும் என்றால், மாகாண காங்கிரஸ் ஸ்தாபனங்களின் சர்வாதிகாரிகள் எவ்வளவு தூரம் அத்தீர்மானங்களை மதித்து நடந்து அமுலுக்குக் கொண்டுவரப் போகிறார்கள் என்பதைப் பற்றித்தான்.

* * * *

சமீபகாலத்தில் மாகாண காங்கிரஸ் சர்வாதிகாரிகள் என்ன முறையைக் கையாண்டு வருகிறார்கள் தெரியுமா?

காங்கிரஸ் மகாசபை, அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி, அ. இ. கா. காரியக் கமிட்டி ஆகியவற்றில் இவர்கள் பெரும்பாலான ஸ்தானங்களைக் கைப்பற்றி யிருக்கிறார்கள்.

மேற்படி ஸ்தாபனங்களின் கூட்டங்களில் சர்வ தேசிய விஷயங்களைப் பற்றியும் அகில இந்திய விஷயங்களைப் பற்றியும் பண்டித ஜவாஹர்லால் நேரு கொண்டுவரும் பிரேரணைகளை அப்படி அப்படியே ஒப்புக்கொண்டு கையைத் தூக்கி விடுகிறார்கள்.

ஜவாஹர்லால்ஜியின் தியாகமும் புகழும் செல்வாக்கும் திறமையும் இல்லாமற்போனால் காங்கிரஸ் ஸ்தாபனம் உயிரை இழந்துவிடும் என்பது இவர்களுக்கு நன்றாய்த் தெரியும்.

ஆகையால், தங்களுடைய மாகாண சர்வாதிகாரத்தை நேரடியாகப் பாதிக்காத எந்தத் தீர்மானத்தையும் இவர்கள் உடனே ஒப்புக்கொண்டு உற்சாகமாகக் கையைத் தட்டி நிறைவேற்றுகிறார்கள்.

கொரியா தீர்மானமா?
ஜவாஹர்லால் கூறுகிறதே சரி!
கம்யூனிஸ்ட் சைனாவை அங்கீகரிப்பதா?
ஜவாஹர்லாலைப் பார்த்துக் கையைத் தூக்கு!
காஷ்மீரா? நேபாளமா? திபேத்தா?
மேற்படி! மேற்படி! மேற்படி!
அகில இந்திய உணவுப் பிரச்னையா?
ஜவாஹர்லால் சொன்னபடி ததாஸ்து!
காங்கிரஸ் புனரமைப்பா?
சரி! சரி! இதோ கையைத் தூக்கியாயிற்று!

இப்படியாக, பெரும்பாலான காரியங்களில் தீர்மானம் என்ன சொல்கிறது என்பதைக் கூடக் கவனியாமலும் கவனித்துப் புரிந்து கொள்ளாமலும் கையைத் தூக்கத் தயாரா யிருக்கிறார்கள்!

ஆனால் மாகாணங்களில் தங்களுடைய கோஷ்டி பலத்தைப் பாதிக்கும் படியான ஏதேனும் ஒரு யோசனை வந்தால், அதை ஜவாஹர்லால் சொன்ன போதிலும் சரி, நாஸுக்காகத் தள்ளி விடுகிறார்கள்!

''இவ்வளவு தடவை உங்களுக்காகக் கையைத் தூக்கியிருக்கிறோமே? இந்த ஒரு விஷயத்தில் ஜனநாயக முறைப்படி எங்களுக்கு விட்டுக் கொடுக்கக் கூடாதா?'' என்று கேட்கிறார்கள். கேட்டுத் தங்கள் நோக்கத்தைச் சாதித்துக் கொள்கிறார்கள்.

தமிழ்நாட்டைப் பற்றி மட்டும் இதை நாம் சொல்லவில்லை. பம்பாய், வங்காளம், ஆந்திரம், மத்தியப் பிரதேசம், உத்தரப் பிரதேசம் ஆகிய பல இடங்களிலும் இதே நிலைமை குடிகொண்டிருக்கிறது.

அதாவது மாகாண காங்கிரஸில் சர்வாதிகார கோஷ்டிகள் ஏற்பட்டு மாகாண காங்கிரஸ் ஸ்தாபனங்களை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கின்றன. தங்கள் கோஷ்டியில் சேராத காங்கிரஸ்வாதிகளை ஒதுக்கவும் வெளியேற்றவும் முயல்கின்றன.

ஆந்திர நாட்டில் காங்கிரஸ் கோஷ்டிகள் ஏறக்குறைய சம பலத்துடன் அமைந்திருக்கின்றன. ஆனால் ஒரு கோஷ்டியைச் சேர்ந்த ஸ்ரீ களா

வெங்கட்ராவ் காங்கிரஸின் பொதுக் காரியதரிசியா யிருக்கிறார். காங்கிரஸில் உயிர் நிலைபோன்ற இந்த ஸ்தானத்தில் ஸ்ரீ களா வெங்கட்ராவ் வீற்றிருப்பது மாகாண கோஷ்டித் தலைவர்களுக்கு மிக்க அநுகூலமாயிருந்து வருகிறது.

* * * *

நம் தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் இங்கே கோஷ்டி மனப் பான்மைக்கும் பரஸ்பர வைஷம்யத்துக்கும் விரோதத்துக்கும் அவசியம் ஒன்றுமே இல்லை.

இங்கேயுள்ள கோஷ்டிப் பிளவு நிவர்த்தி செய்ய முடியாத அவ்வளவு பெரிய பிளவு அல்ல.

தமிழ்நாட்டுக் காங்கிரஸில் இப்போது இரண்டு கோஷ்டிகள் இருக்கின்றன. இவை ஐந்தாறு வருஷத்துக்கு முன்னால் ஏற்பட்டிருந்த கோஷ்டிகள் அல்ல. புதிதாக உருப்பெற்றிருக்கும் கோஷ்டிகள்.

சென்ற மாகாண காங்கிரஸ் தேர்தலில் ஸ்ரீ காமராஜை ஆதரித்தவர்கள் ஒரு கோஷ்டி. ஸ்ரீ சுப்பையாவை ஆதரித்தவர்கள் இன்னொரு கோஷ்டி.

ஸ்ரீ காமராஜை ஆதரித்தவர்கள் பெரும்பாலான மந்திரிகளோடு, ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை, ஸ்ரீ சிவஞான கிராமணியார் முதலியவர்கள்.

ஸ்ரீ சுப்பையாவை ஆதரித்தவர்கள் கனம் பெருமாள்சாமி ரெட்டியார், ஓமந்தூர் ரெட்டியார், ஸ்ரீ நாடிமுத்துப் பிள்ளை, ஸ்ரீ அவிநாசிலிங்கம் செட்டியார், ஸ்ரீ வி. சுப்பிரமண்யம் முதலியோர்.

பார்க்கப் போனால், இரண்டாவது கோஷ்டியில் பலர் ஏற்கெனவே ஸ்ரீ காமராஜ் அவர்களைத் தீவிரமாக ஆதரித்தவர்கள்தான்.

ஆகவே பிளவுக்கும் பிரிவினைக்கும் காரணம் என்ன இருக்க முடியும்?

பரஸ்பரம் சிறிதுவிட்டுக் கொடுக்கத் தயாராயிருந்தால், "காங்கிரஸுக்கு எல்லாருடைய சேவையும் வேண்டியதே" என்ற மனப் பான்மையுடன் நடந்து கொண்டால், சுலபமாகத் தமிழ்நாட்டில் கோஷ்டிப் பிளவை நீக்கி ஒற்றுமை உண்டுபண்ணி விடலாம்.

மற்ற சில மாகாணங்களில் உள்ளதுபோல் நமது தமிழ் மாகாணத்தில் எதிர்ப்புக் கட்சியார் பிரிந்து வெளியே போய்த் தனிக் கட்சி அமைக்கவும் இல்லை, காங்கிரஸுக்குள்ளேயே இருந்து தனிக் கட்சி கூட்டவும் இல்லை யென்பது முக்கியமானது.

இதிலிருந்து ஸ்ரீ சி. பி சுப்பையா, ஓமந்தூர் செட்டியார், கனம் பெருமாள் சாமி ரெட்டியார் முதலியவர்கள் எவ்வளவு நல்ல காங்கிரஸ்காரர்கள் என்பது நிச்சயமாகிறது.

இவர்களுடைய புகார்களைக் களைந்து மாகாண காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஒற்றுமை ஏற்படுத்துவது அவ்வளவு கடினமான காரியமாக இராது.

* * * *

சில காலத்துக்கு முன்பு தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் சிதம்பரத்தில் பேசும்போது, "காங்கிரஸுக்குள் பணக்காரர்கள் புகுந்து காங்கிரஸ் ஸ்தாபனத்தைக் கைப்பற்ற முயற்சிக்கிறார்கள். அதற்கு நான் விட்டுவிட மாட்டேன்!" என்று எச்சரிக்கை செய்தார். யாரை மனதில் வைத்துக்கொண்டு இப்படிச் சொன்னார் என்பது தெளிவாகவில்லை.

எனினும், அவருடைய உத்தேசம் வெற்றி பெற்றதாகச் சொல்வதற்கில்லை. உதாரணமாக, தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்து நாலு அங்கத்தினர் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள். அவர்கள்

அட்டைப்பட விளக்கம்

## பார்த்திபன் கனவு

மேற்படி சரித்திரக் கதையைப் பூனா ரஸிகர்கள் நாடகமாக்கி நடித்த போது, பார்த்திபன் கனவுச் சித்திரங்களை அபூர்வமான முறையில் திரையில் தீட்டிக் காட்டினார்கள். அத் திரைக் காட்சிகளில் ஒன்று நமது இந்த இதழ் அட்டையை அலங்கரிக்கிறது.

யார் யார் தெரியுமா? (1) ஸ்ரீ வி. எஸ். தியாகராஜ முதலியார், (2) ஸ்ரீ வி. நாடிமுத்துப் பிள்ளை, (3) ஸ்ரீ சாம்பசிவ ஐயர், (4) ஸ்ரீ கிருஷ்ணசாமி வாண்டையார்.

இவர்களைக் காட்டிலும் பெரிய பணக்காரர்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் வேறு யார் இருக்கிறார்கள்?

உண்மையில், பணக்காரர்கள் என்பதற்காக யாரையும் நிராகரிக்க வேண்டிய அவசியம் கிடையாது. காங்கிரஸ் இந்திய மக்கள் அனைவருக்கும் பொதுவான ஸ்தாபனம். பணக்காரர்களுக்கும் அதில் இடம் உண்டு.

ஆனால் பணக்காரர்களுக்குக் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் விசேஷ சலுகை காட்டப்பட்டது என்ற பேச்சுக்கு மட்டும் இடம் ஏற்படக் கூடாது.

பணக்காரர்களில் 'வேண்டிய பணக்காரர்கள்' 'வேண்டாத பணக்காரர்கள்' என்ற பேத பாவத்தை மேலேயுள்ளவர்கள் வைத்துக் கொள்ளக் கூடாது. ஏழைகள் விஷயத்திலும் அப்படித்தான்.

காங்கிரஸுக்குப் பணக்காரர், நடுத்தர வகுப்பார், ஏழைகள்—எல்லாருடைய சேவையும் தேவை. அம்மாதிரியே பழைய காங்கிரஸ்காரர்கள், புதிய காங்கிரஸ் வாதிகள், காங்கிரஸுக்கு வெளியிலிருப்பவர்கள்,—எல்லாருக்குமே காங்கிரஸின் கதவு விசாலமாகத் திறந்து வைக்கப்பட வேண்டும்.

யாராயிருந்தாலும் நேர்மையான முறையில் தேசத்துக்குப் பாடுபட முன்வந்தால் சேர்த்துக் கொள்ளவேண்டும். அறிவும் திறமையும் சீலமும் உள்ளவர்களை வருந்தி அழைத்தும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

ஜவாஹர்லால்ஜி இதைத்தான் படித்துப் படித்துச் சொல்லி வருகிறார். "காங்கிரஸ் யாருடைய சொத்தும் அல்ல. தலையில் காந்தி குல்லா இருந்தால் மட்டும் போதாது. காந்தி குல்லாவுக்கு அடியில் மூளை இருக்கிறதா எனப் பார்க்கவேண்டும். மூளையும் திறமையும் உள்ளவர்களை விரும்பி வரவேற்க வேண்டும்" என்று அப்பட்டமாகவே சொல்லியிருக்கிறார்.

இதை யனுசரித்துத்தான் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியும் தீர்மானம் செய்திருக்கிறது. 'அத்தீர்மானத்தை மாகாண சர்வாதிகாரிகள் காரியத்தில் எப்படி நிறைவேற்றப் போகிறார்கள் என்பதைப் பார்க்கலாம்.

# டாக்டர் சுப்பராயன்

இந்தோனேசியாவில் இந்திய சர்க்காரின் தூதராக இருந்துவரும் டாக்டர் சுப்பராயன் விரைவில் இந்தியாவுக்கு வருவார் என்றும், அவருக்குச் சென்னை அரசியல் வாழ்க்கையில் ஈடுபடும் உத்தேசம் இருக்கிறது என்றும் டில்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகையில் ஒரு செய்தி வெளியாகியிருக்கிறது.

இது உண்மையானால், மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

காங்கிரஸுக்கு வெளியிலுள்ள அறிவாளிகளைக் கூட வருந்தி அழைத்துக் காங்கிரஸில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லப்படுகிற இச்சமயத்தில் டாக்டர் சுப்பராயன் அவர்களைத் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் வாதிகள் உற்சாகமாக வரவேற்க வேண்டும்.

சென்னை மாகாணத்தில் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்களின் மந்திரிசபை சில காலம் மிக்க செல்வாக்குடனும் நல்ல பெயருடனும் நடந்து வந்தது. அச்சமயம் டாக்டர் சுப்பராயன் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் மந்திரி சபையில் இருந்தார்.

துரதிருஷ்டவசமாக ஓமந்தூராருக்கும் டாக்டர் சுப்பராயனுக்கும் கடுமையான மனவேற்றுமை ஏற்பட்டது. டாக்டர் சுப்பராயன் ராஜிநாமா செய்ய நேர்ந்தது. அச்சமயத்துக் "கல்கி" இதழில் இதைக் குறித்து மிக்க வருந்தி எழுதியிருந்தது நேயர்களுக்கு நினைவிருக்கலாம்.

டாக்டர் சுப்பராயன் ராஜிநாமா செய்தது முதல் ஓமந்தூர் மந்திரி சபை நாளுக்கு நாள் பலவீனம் அடைந்தது. கடைசியில் ஓமந்தூராரும் ராஜிநாமா செய்யும்படி ஆயிற்று.

• • •

சிறந்த கல்வி அறிவும் பண்பாடும் நீண்ட கால நிர்வாக அநுபவமும் திறமையும் சீலமும் படைத்தவர் டாக்டர் சுப்பராயன். ராஜாஜி, ஸ்ரீ சத்தியமூர்த்தி இவர்களுக்கு அடுத்தபடியாகச் சென்னைச் சட்டசபைக்குக் கௌரவத்தை அளித்து வந்தவர் அவர்தான். டாக்டர் சுப்பராயன் ஓமந்தூர் மந்திரி சபையில் இருந்தபோது முஸ்லிம் லீகர் முதலிய எதிர்க் கட்சியாருக்குப் பளிச்சுப் பளிச்சென்று கொடுத்து வந்த பதில்கள் சட்டசபை நடவடிக்கைகளுக்கு உயிர் அளித்து வந்தன.

வயது வந்த அனைவரும் வோட்டுக் கொடுத்துப் புதிதாக ஏற்படப் போகும் சென்னைச் சட்டசபையில் டாக்டர் சுப்பராயன் அங்கத்தினராயிருந்தால் அச்சபையின் சிறப்பு உயரும் என்பதில் சந்தேகமில்லை.

டாக்டர் சுப்பராயன் எல்லா விதத்திலும் தகுதி பெற்ற காங்கிரஸ் வாதி; ஒரு வருஷம் சிறையிலும் இருந்தவர்; நிர்வாக அநுபவம் படைத்தவர்; எல்லாருடனும் சுமுகமாகப் பழகிச் சரிக்கட்டிக் கொண்டு போகக் கூடியவர். இப்போது வெளிநாட்டு அநுபவமும் அடைந்து திரும்புகிறார். அப்படிப்பட்டவருடைய சேவையைத் தமிழ்நாடும் சென்னை மாகாணமும் நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளும் என்று நம்புகிறோம்.

# பேச்சும் நடப்பும்


அமெரிக்க நண்பரின் அயல்நாட்டுக் கொள்கையை ஆதரிக்க முடியாதது குறித்து வருந்துகிறேன்...
ஆட்லி
"...நேருவின் கொள்கை நன்றாக இருக்கிறது. ஆயினும் அதைப் பற்றி இன்னும் யோசிக்க வேண்டும்..."
"உடனடியாக ஆசியாவில் அமைதி நிலவினால்தான் நாம் அங்கே போட்டுள்ள மூலதனம் பிழைக்கும்..."
"நமது காமன்வெல்த் நாடுகளும் ஆசியாவில் அமைதியையே விரும்புகின்றன..."
"ஆகவே, அமெரிக்கத் தீர்மானத்துக்குச் சாதகமாக ஓட்டுப் போடுமுன் ஒருமுறைக்கு இருமுறை யோசிக்க வேண்டும்..."
இப்படி யெல்லாம் பேசியவர் கடைசியில்...—
"ஆகா! என்ன அழகான பேனா! எந்தக் கையெழுத்து வேண்டுமானாலும் போடத் தயார்!"— என்கிறார்.
அயல் நாட்டுக் கொள்கை
ட்ரூமன்
SHASTRY

# சும்மா இருந்த சங்கை ஊதிக் கெடுத்தானும் ஆண்டி !

ரஜனி

இலங்கை இந்தியர் நிலைமையைப் பற்றி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் இவ்வாரம் நடைபெற்றுள்ள விவாதம் மிகவும் அசந்தர்ப்பமானதாயும் துரதிர்ஷ்ட வசமானதாயுமே இலங்கையில் பொதுவாகக் கருதப்படுகின்றது. இலங்கை இந்திய காங்கிரஸ் தலைவர்கள் இந்தியர்களின் நியாயமான உரிமைகளைப் பெற்றுக் கொடுப்பதற்குக் கண்ணியத்துடன் கடுமையாகப் போராடிக் கொண்டிருக்கும் நெருக்கடியான இத்தருணத்தில், பொறுப்பற்ற முறையிலும் உண்மை நிலைமையை அறியாமலும் சில அங்கத்தினர்கள் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் பேசியிருப்பது, மனக்கசப்பை மேலும் வளர்க்கவே உதவியிருக்கின்றது. பத்து லட்சம் இந்தியர்களிலே சுமார் 500 பேர்கள் தான் இதுவரை இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளப் பட்டிருக்கிறார்களென்று சில அங்கத்தினர்கள் கூறுகின்றார்கள். உண்மையில் இதுவரை 4,000 இந்தியர்கள் இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளப்பட்டிருக்கின்றனர். பத்து லட்சம் இந்தியர்களில் 4,000 மிக மிகக் குறைவான எண்ணிக்கைதான். அதனால் சரியான விவரம் தெரியாதபோது 500 என்று ஏன் குறைத்துச் சொல்லவேண்டும்! பொறுப்பு வாய்ந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள் புள்ளி விவரம் கொடுப்பதாயின் சரியான விவரங்கள் கொடுக்கவேண்டும்; சரியான விவரம் தெரியாவிடில் வாயை மூடிக்கொண்டு சும்மாயிருந்து விடுவதே உத்தமம்.

கமிட்டியின் பரிசீலனைக்குச் சமர்ப்பிக்கப் பட்ட தீர்மானம் இலங்கை இந்திய காங்கிரஸ் இவ்வளவு காலமும் எந்தக் கொள்கைக்காகப் போராடி வருகின்றதோ அந்தக் கொள்கையையே புறக்கணிப்பதாயிருக்கின்றது. இங்குள்ள இந்தியத் தோட்டத் தொழிலாளர்களில் பெரும்பாலோர் பல தலைமுறைகளாக இலங்கையிலேயே வசிப்பவர்கள்; இந்தியா கருப்பா அல்லது வெப்பா என்பதும் தெரியாதவர்கள். தற்சமயமுள்ள கடுமையான இலங்கைப் பிரஜாவுரிமைச் சட்டத்தின்படிப் பார்த்தாலும் இவர்கள் சிங்களவர்களுக்குச் சரிசமமதயான உரிமைகளைப் பெறவேண்டிய இலங்கையின் வம்சாவளிப் பிரஜைகளாகிறார்கள். சங்கடமெல்லாம் இந்தப் பிரஜாவுரிமையை சுகப்படுத்துவதிலும் சுகப்படுத்துவதற்குக் கோரும் நிபந்தனைகளிலும்தான். எனவே, "நாங்கள் இலங்கைப் பிரஜைகள்; இலங்கைதான் எங்களுடைய தாய் நாடு; தாய் நாட்டில் பிறப்புரிமையான பிரஜா வுரிமையைப் பெற்றே தீருவோம்" என்பதுதான் இலங்கை இந்திய காங்கிரஸ் போராட்டத்தின் அடிப்படைக் கொள்கையே தவிர "பிரஜா வுரிமை கொடுங்கள்; கொடுக்க மறுத்தால், இந்தியாவுக்குப் போய் விடுகிறோம்!" என்பதல்ல! இது பயங்கொள்ளிகள் பேசக்கூடிய பேச்சு. இலங்கையில் சாசுவதமான சிரத்தையில்லாதவர்கள் சொல்லக்கூடிய வார்த்தை. விவரம் தெரியாத ஒரு சிலரின் யோசனைகளைக் கேட்டு இந்திய அரசாங்கம் இலங்கையிலுள்ள இந்தியத் தோட்டத் தொழிலாளர்களைத் திருப்பியழைப்பதாயிருந்தால் எவ்வளவு பேர் திரும்பிவரத் தயாராக யிருப்பார்கள்! இரண்டு தலை முறைகளாக இலங்கையில் வசித்தாலே இலங்கைப் பிரஜாவுரிமைச் சட்டத்தின்படி இக்காட்டுப் பிரஜைகளாகி விடும் இந்தியர்களைத் திருப்பியழைக்க இந்திய அரசாங்கத்துக்கு என்ன உரிமைதானிருக்கிறது! இதெல்லாம் போகட்டும். இந்தியாவின் இன்றைய பொருளாதார நிலைமையில் திருப்பியழைக்க விரும்பும் பத்து லட்சம் இந்தியர்களுக்கும் விவரமறியாத அந்தக் கோஷ்டியார் தயாராக வேலை வைத்துக் கொண்டிருக்கிறார்களா! அனுபவ சாத்தியமற்ற இதுமாதிரி வாய் வீச்சுகளினால் யாருக்கு என்ன லாபம்!

"நீங்கள் இங்கு ஏதாவது செய்து விடுகிறீர்கள்; அது இலங்கை இந்திய காங்கிரஸ் தலைவர்களின் நிலைமையைத் தர்ம சங்கடத்துக்கு உட்படுத்தி விடுகிறது. பலாபலன்களை அனுபவிக்க வேண்டியவர்கள் அவர்களே தவிர நீங்களல்ல!" என்று பண்டித நேரு காங்கிரஸ் கமிட்டியில் எச்சரித்தது உண்மையான நிலைமையைப் பிரதிபலிப்பதாகும். இலங்கை இந்தியர்களிடம் நேருஜிக்கும் ராஜாஜிக்கும் இருப்பதைவிட அதிகமான அக்கறை மற்றவர்களுக்கு இருந்துவிடப் போவதில்லை. இரு தேச அரசாங்கங்களுக்கு மிடையில் ஹைகமிஷனர்களின் மூலமாக நடைபெற்ற கடிதப் போக்குவரத்து இப்பொழுது அந்தரங்கமாயிருந்த போதிலும் என்றைக்காவது ஒரு நாள் பகிரங்கமாகும்பொழுது இந்திய அரசாங்கம் பலர் நினைப்பதற்கு மாறாக எவ்வளவு உறுதியான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறதென்பது வெளியாகும்.

இந்தியாவைப் போலவே இலங்கையும் இன்று ஒரு சுதந்திர தேசம். சுதந்திர நாடுகளுக் கிடையில் நடைபெறும் ராஜீய பேச்சுகளில் ஒரு கண்ணியம் நிலவுவது இன்றியமையாதது. நேருஜி குறிப்பிட்டிருப்பதைப் போல இலங்கையுடன் போர் தொடுக்க வேண்டுமென்ற முட்டாள்தனமான எண்ணம் நிச்சயம் யாருக்கும் இருக்கமுடியாது.

இலங்கை இந்தியர்கள் இந்தியாவிலிருக்கும் தங்களுடைய நண்பர்களைக் கேட்டுக் கொள்ளுவதெல்லாம், "எங்களுக்கு உதவி புரிய முடியுமானால் சத்தம் போடாமல் செய்யுங்கள்! உதவிபுரிய முடியாவிட்டால் அபகாரமாவது செய்யாமலிருங்கள்!" என்பதுதான்.

# ஆடல் பாடல்

## கர்நாடகம்

## "மனிதனும் மிருகமும்"

நாம் மனிதனைப் பார்த்திருக்கிறோம்; மிருகத்தையும் பார்த்திருக்கிறோம். மனிதனை ஒருவாறு அறிந்திருக்கிறோம்; மிருகத்தை அவ்வளவாக அறிந்ததில்லை. ஆயினும் மனிதனுக்கும் மிருகத்துக்கும் உள்ள வேற்றுமைகளை ஓரளவு அறிவோம். மனிதனுக்குப் பேசத் தெரியும்; ஆகையால் பொய் சொல்ல முடியும். மிருகம் பேசவுமில்லை; பொய் சொல்லுவதுமில்லை. மனிதனுக்கு இரண்டு கைகள் உண்டு. அந்தக் கைகளினால் திருடுவான்; பிறர் பொருளைப் பறிப்பான்; பிறரை ஹிம்ஸிப்பான். மிருகத்துக்குக் கை இல்லாதபடியால் இதை யெல்லாம் செய்ய முடியாது.

சில மிருகங்கள் பசி எடுத்தால் மட்டும் பிற மிருகங்களைக் கொன்று தின்னும்.

மனிதர்களோ காரணம் இன்றியே பிறரைக் கொல்லுவார்கள். (கொரியாவைப் பார்த்துக் கொள்க.)

மிருகம் தன்னைத் தாக்க வருகிறவர்களைத் திருப்பித் தாக்கும்.

மனிதனே சாதுவாக வழியோடு போகிற மாட்டைப் போய் அடிப்பான். அடிப்பது மட்டுமல்ல; மாட்டின்பேரில் புகாரும் சொல்லுவான். "அது ரொம்பப் பொல்லாத மாடு! அடிக்கப் போனால் முட்ட வருகிறது!" என்பான்.

மனிதனுக்கும் மிருகத்துக்கும் உள்ள வேற்றுமைகள் இவ்விதம் இருக்க, நமது இளம் நாடக ஆசிரியர் ஸ்ரீ எஸ். டி. சுந்தரம் தாம் புதிதாக எழுதியுள்ள நாடகத்துக்கு என்ன அபிப்பிராயத்தின் பேரில் "மனிதனும் மிருகமும்" என்று பெயர் வைத்தார் என்பது அவ்வளவாக எனக்கு விளங்கவில்லை. நாடகத்தைப் பார்த்த பிறகுகூட விளங்கவில்லைதான்! ஸ்ரீ எஸ். டி. சுந்தரம் அவர்கள் இந்த நாடகத்தைப் பதிப்பித்துப் புத்தகமாகக் கொண்டு வரும்போது, காலஞ்சென்ற பெர்னார்ட்ஷாவின் பாணியில் ஒரு நீண்ட முன்னுரை எழுதி, அதில் மேற்படி விஷயத்தை விளக்குமாற்றால் நன்கு விளக்குவார் என்று நம்புகிறேன். ('விளக்குமாற்றால்' என்பதை 'விளக்கும் + ஆற்றல்' என்று விளக்கி விடுகிறேன்.)

நாடகத் தலைப்பின் கருத்து எதுவேனும் இருக்கட்டும். இந்த நாடகத்தை மிகச் சக்தி வாய்ந்ததாயும் உணர்ச்சி மிக்கதாயும் திடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்ததாயும் சிறந்த நடிப்புக்குத் தகுந்ததாயும் ஆசிரியர் ஆக்கியிருக்கிறார். இதை யெல்லாம் விட முக்கியமாக, சமூகத்திலுள்ள ஊழல்களைக் களைய வேண்டும் என்னும் இலட்சியத்தை வைத்துக் கொண்டு எழுதியிருக்கிறார். அதையும் கீழ்த் தரமாக ஆக்கி விடாமல், பெர்னார்ட் ஷா, இப்ஸன் முதலிய மேனாட்டு ஆசிரியர்களின் உயர்தர பாணியில் இயற்றியிருக்கிறார்.

இந்த நாடகத்தில் கொலைகள் கொஞ்சம் அதிகமாகத்தான் நிகழ்கின்றன. ரயில் கொலை, கத்திக் கொலை, தடியடிக் கொலை, துப்பாக்கிக் கொலை, தற்கொலை, — எல்லாம் ரகத்துக்கு ஒவ்வொன்றாக வருகின்றன!



சோக நடிகர் ஸ்ரீ சாரங்கபாணி

ஆனாலும், நாடகக் கலைக்கு இந்த நாடகத்தின் மூலம் ஆசிரியர் உயிர் கொடுத்திருப்பதால் மேற்கூறிய கொலைகளை யெல்லாம் நாம் மன்னித்துவிடத் தயாராயிருக்கிறோம்.

பணத்தாசை பிடித்த கொடியோன் ஒருவன் ஒன்றுக்கு மேல் ஒன்றாகப் பல துர்க் கிருத்யங்களைச் செய்கிறான். வஞ்சகங்களையும்புரிகிறான். கடைசியாக, காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்ட உடனே, புனிதமான காந்திக் குல்லாவைத் தரித்துக் கொண்டும் நாட்டுமக்களை ஏமாற்றப் பார்க்கிறான்!

இவனுக்கு மாறாக, கலாசாலைத் தலைமை ஆசிரியர் ஒருவர் அவனுடைய லஞ்ச வலையில் விழுவதற்கு மறுத்து, அதனால் விளையும் கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாகிறார். அப்படி உள்ளாகியும் மிகத் தீரத்துடன் சத்தியத்தைக் கடைப் பிடித்து நிற்கிறார்.

இவ் விருவருடைய போராட்டத்தை முக்கிய அடிப்படையாகக் கொண்டது நாடகக் கதை.

இடை இடையே காதலும் காதலர்களும் கோர்ட்டும் வக்கீல்களும் பைத்தியக்கார ஆஸ்பத்திரியும் மேற்படி ஆஸ்பத்திரியின் டாக்டரும் மற்றும் பலரும் குறுக்கிட்டுக் கதைக்கும் நாடகத்துக்கும் சுவை தருகிறார்கள்.

நாடகம் முழுவதுமே கவனத்தைக் கவர்வதாக இருந்தபோதிலும், நாடகத்தில் நடித்த ஒரு சிலருடைய நடிப்பு என் மனதில் நன்றாகப் பதிந்திருக்கிறது. அவர்களைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன்.

நாடகத்தில் கொடியோனாக நடித்த ஸ்ரீ சுந்தாராம் என்பவர், "அப்பப்பா! இப்படியும் ஒரு அரக்கன் மனித வடிவத்தில் இருக்க முடியுமா!" என்று கருதும்படி செய்துவிட்டார். அவருடைய தலையில் காந்திக் குல்லாவைப் பார்த்த பிறகு, காந்திக் குல்லாவுடன் வரும் யாரைப் பார்த்தாலும் நமக்குப் பீதிகரமாக இருக்கிறது. பண்டித ஜவாஹர்லால் ஜீக்கு, "தயவு செய்து இனி காந்தி குல்லா அணிய வேண்டாம்" என்று வேண்டிக் கொண்டு ஒரு மகஜர் தயாரித்து அனுப்பலாமா என்று தோன்றுகிறது.

ஆனால், காந்தி குல்லா தரித்துக் கலாசாலைத் தலைவராக நடித்த ஸ்ரீ கே. சாரங்கபாணி மேற்கூறிய நம் எண்ணத்தை மாற்றி விடுகிறார். இந்த நாடகத்தில் ஸ்ரீ சாரங்கபாணியின் நடிப்பைப் பார்த்த யாரும் அவரைக் 'காமெடியன் சாரங்கபாணி' என்று கருதமாட்டார்கள். இத்தனை காலமாக ஸினிமாத் துறையிலும் அரங்க மேடையிலும் ஹாஸ்ய வேஷங்களிலேயே தோன்றி ஜனங்களைச் சிரிப்பாய்ச் சிரிக்க வைத்தவர், அத்தனைக்கும் பரிகாரமாக அன்றைக்குச் சபையில் கூடியிருந்தவர்களில் பலரை அழும்படிச் செய்து விட்டார்.

ஹாஸ்ய நடிகர் ஒருவர் மேடையில் வந்து விட்டாலே ஜனங்கள் சிரிக்கத் தயாராகிவிடுவது வழக்கம். அவர் அழுதாலும் இவர்கள் சிரிப்பது மரபு. முதலில் ஸ்ரீ சாரங்கபாணி மேடையில் தோன்றியதும் கதையின் போக்கை அறியாத சபையோர் கொஞ்சம் சிரிக்கத்தான் ஆரம்பித்தார்கள். ஆனால் வெகு சீக்கிரத்தில் அது மாறி, "சிரிப்பதா! அழுவதா!" என்ற நெருக்கடியான நிலைமைக்கு வந்தார்கள். இன்னும் சிறிது நேரத்துக்கெல்லாம் சிரிப்பையும் சாரங்கபாணியையும் அடியோடு மறந்து சத்தியத்துக்காக இத்தனை துயரங்களுக்கு உள்ளான கலாசாலைத் தலைவரைக் குறித்துக் கண்ணீர் வடிக்கத் தொடங்கினார்கள். இதற்கு மேலே ஒருவருடைய நடிப்பின் ஆற்றலுக்குப் பாராட்டு வேறு என்ன இருக்க முடியும்!

கொடியோனுடைய மகனாக 'பேபி' என்ற செல்லப் பெயர் தாங்கி நடித்தவர் கலையை உத்தாரணம் செய்வது பற்றிப் பேசியதைக் கேட்ட பிறகு, "கலை ஏன் உத்தாரணம் ஆக மறுக்கிறது!" என்பதைச் சபையோர் நன்கு அறிந்து கொள்ள முடிந்தது. உண்மை வாழ்க்கையில் இவரைப் போல் கலையைக் காப்பாற்றுகிறேன் என்று முன் வருகிறவர் பலரை நம் மனக் கண் முன்னால் கொண்டு வந்து நிறுத்தினார். கலையை உத்தாரணம் செய்ய வந்த 'பேபி'யும் அவரை உத்தாரணம் செய்ய வந்த காதலியுமாக நம்மைக் 'கலை' என்றாலே பயப்படும்படியாகச் செய்து விட்டார்கள்!

ஆயினும் இவர்களைப் போன்ற எத்தனையோ பேர் உத்தாரணம் செய்து நமது கலைகள் பிழைத்திருக்கிறபடியால் இனியும் பிழைத்திருக்கும் என்று நம்புவோமாக.

'பேபி' வேஷத்தில் நடித்த ஸ்ரீ வி. கே. கார்த்திகேயன் முதல்தர நடிகர் என்பதில் சந்தேகமில்லை.

கடைசியாக, பைத்தியக்கார ஆஸ்பத்திரியின் டாக்டராக நடித்த ஸ்ரீ எஸ். டி. சுந்தரத்துக்கு வருகிறேன். முதலில், நாடக ஆசிரியர் எஸ். டி. சுந்தரம்தான் இந்த வேஷம் தரித்திருக்கிறார் என்பதை நான் கண்டு கொள்ளவே முடியவில்லை.



பைத்தியக்கார ஆஸ்பத்திரி டாக்டரும், பாரிஸ்டரும்

சொன்னபிறகுதான் தெரிந்தது. ஒரு நாடியானது எவ்வளவு அபாரமான வேலை செய்யக் கூடியது என்பதும் தெரிந்தது.

பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் உள்ள ஒருவரைக் குறித்து விசாரிப்பதற்காக பாரிஸ்டர் ஒருவர் வருகிறார். அவரும் சிகிச்சைக்காக வந்தவர்தான் என்று பாவித்துக் கொண்டு டாக்டர் பேசுவதும் பரிசீலனை செய்வதும் மிகவும் உயர் தரமான நடிப்பு.

"முப்பது வருஷமாக இந்த ஆஸ்பத்திரியில் நான் டாக்டரா யிருக்கிறேன். ஒருவருடைய பைத்தியத்தையாவது தெளிவித்த ஞாபகம் இல்லை!" என்று ஒரு கட்டத்தில் மேற்படி டாக்டர் சொல்லுகிறார்.



பேயியாக நடித்த ஸ்ரீ கார்த்திகேயன்

டாக்டரால் பைத்தியத்தைத் தெளிவிக்க முடியாமற்போனாலும் ஸ்ரீ எஸ். டி. சுந்தரம் பலரைப் பைத்தியமாக ஆக்கிவிடக் கூடியவர் என்று தெரிந்து கொண்டேன். சில காலமாகத் தமிழ்நாட்டில் நாடகப் பைத்தியம் அதிகமாகி வருகிறது. ஸ்ரீ எஸ். டி. சுந்தரம் இன்னும் பலரை அந்தக் கோஷ்டியில் சேர்த்து விடுவார் என்று கருதுகிறேன். அதிலும் டாக்டர் திரிமூர்த்தியைப் போன்ற அறிவாளிகளைக் கூட நாடகப் பைத்தியம் பிடிக்கச் செய்துவிட அவரால் முடியும் என்று அன்றைக்குத் தெரிந்தது.

"அன்றைக்கு" என்றால், திருவல்லிக்கேணி பெண் பாடசாலைக் கட்டிட நிதி உதவிக்காக மேற்படி பாடசாலையின் கலா மண்டபத்தில் நடந்த நாடகத்தின் போதுதான். டாக்டர் திரிமூர்த்தி, ஸ்ரீ திருமலாச்சாரி ஆகியவர்கள் அல்லும்பகலும் பாடுபட்டு நிதி சேர்த்து வளர்த்து வரும் பாடசாலையைத்தான் சொல்லுகிறேன்.

ஸ்ரீ எஸ். டி. சுந்தரம் ஏற்கெனவே "கவியின் கனவு" என்னும் அரிய நாடகத்தை எழுதிப் புகழ் பெற்றவர். ஆயினும் 'தனி மரம் தோப்பு ஆகாது' என்ற பழமொழியை முன்னிட்டு, ஒரு நல்ல நாடகம் எழுதி விட்டதனாலேயே ஒருவரை நாடக ஆசிரியர் என்று சொல்லி விடலாமா என்று தயங்கியதுண்டு. "மனிதனும், மிருகமும்" என்ற நாடகத்தைப் பார்த்தபிறகு அந்தத் தயக்கம் நீங்கிவிட்டது. நாடகாசிரியர் ஸ்ரீ எஸ். டி. சுந்தரம் அவர்களின் மூலம் தமிழும் தமிழ் நாடக மேடையும் புது முறையில் சிறப்படையும் என்று உறுதியாக நம்புகிறேன்.

# அங்கப் போர்

"அதிக ஜாகை வசதித் திட்டத்துக்கு மான்யம் விடப் போகிறார்கள்" என்று ஒரு புது டில்லிச் செய்தி கூறுகிறது.

அந்த ஜாகைத் திட்டத்துக்குச் சற்று அதிகமாகவே சர்க்கார் மான்யம் விடுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

★

"பாக் சர்க்காரிலிருந்து ஜாபருல்லா விலகுவார்!" —ஒரு செய்தித் தலைப்பு

இந்தச் செய்தி பொய்யாக மாறினால் இதை ஜாபருல்லாவே பரப்பினார் என்ற முடிவுக்கு நாம் நிச்சயமாக வரலாம்.

★

"மூன்றும் வகுப்புப் பிரயாணிகளுக்குத் தூங்கும் வசதி அளிப்பது சாத்தியமில்லை."

—ஸ்ரீ சந்தானம்

ஏன்! மூட்டைப் பூச்சிகளுடன் சர்க்கார் ஏதாவது யுத்த நிறுத்த ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறார்களா!

★

"பென்ஸிலின் போன்ற அத்தியாவசிய மருந்துகள் இப்பொழுது தேவைக்கு அதிகமான அளவில் கை வசம் இருக்கின்றனவாம்."

—ஒரு செய்தி

இதிலிருந்து நோயாளிகள் தொகை குறைந்திருக்கிறது என்று நாம் ஊகிக்கலாமா!

"நெய்யுடன் அயல்நாட்டுக் கொழுப்பைக் கலப்படம் செய்ததாக ஒரு வழக்கு தொடரப்பட்டது." —சென்னைச் செய்தி

சுதந்திர பாரதத்தில் இன்னமும் அயல் நாட்டு மோகம் இருப்பது தவறு. அயல் நாட்டுக் கொழுப்புக்குப் பதில் உள்நாட்டுக் கொழுப்பைக் கலந்தால் அது குற்றமாகாது அல்லவா! என்று கேட்கிறார் ஒரு நெய் வியாபாரி.

★

"தோடி, காம்போதி, மோகனம் ஒன்றும் எனக்குப் பிடிக்காதுங்க. ஷண்முகப் பிரியாதான் எனக்கு மிகவும் பிடித்தமான ராகமுங்க!"

"அப்படியா! உங்கள் பெயர் என்னவோ!"

"என் பெயர் ஷண்முகங்க!"

★

"ஸ்திரீகளும் கிரிக்கெட் ஆடவேண்டும்."

—ஸி. கே. நாயுடு

ஏன்! இப்பொழுது கிரிக்கெட் மாட்சுகளுக்குக் கூடும் கூட்டம் போதாதா!

★

"யூகலிப்டஸ் மரத்திலிருந்து பத்திரிகைகள் உபயோகத்துக்கான காகிதம் செய்யலாம்."

—டாஸ்மேனியா செய்தி

இந்த யூகலிப்டஸ் மர-காகிதங்களில் அச்சடித்து வெளிவரும் செய்திகளும், கதைகளும் வாசகர்களின் தலைவலியைப் போக்குமா!

# பொன்னியின்



அத்தியாயம் 34

## லதா மண்டபம்

அடர்ந்த மாந்தோப்புக் கிடையே சென்ற ஒற்றையடிப் பாதையின் வழியாக அம்மங்கை விடு விடு வென்று நடந்து செல்ல வந்தியத்தேவனும் விரைவாகத் தொடர்ந்து சென்றான். மரஞ்செடிகளின் மீது மோதிக் கொள்ளாமல் அந்த இருளில் நடந்து செல்லுவது கஷ்டமாகத்தான் இருந்தது. ஒரு சமயம் இவன் மரத்தில் மோதிக்கொள்ளப் பார்த்துத் தயங்கி நின்றபோது அந்த மங்கை திரும்பிப் பார்த்து "ஏன் நிற்கிறாய்? வழி மறந்து போய்விட்டதா? நீதான் இருட்டில் கண் தெரிகிற மனிதன் ஆயிற்றே!" என்றாள். அதற்குப் பதிலாக வந்தியத்தேவன் உதட்டில் விரலை வைத்து முன்னால் அவள் சொன்னதுபோல் "உஷ்!" என்றான். அதே நேரத்தில் மதிள் சுவருக்கு வெளியே ஏதோ சப்தம் கேட்டது. மனித நடமாட்டம் போலத் தொனித்தது. பிறகு இருவரும் மறுபடி நடந்தார்கள். கொஞ்ச தூரம் போனதும் வல்லவரையன் இலேசாகச் சிரித்தான். அந்த மங்கை திரும்பிப் பார்த்து "என்னைக் கண்டு சிரிக்கிறாய்?" என்றாள்.

"கண்டு சிரிக்கவில்லை; கேட்டுச் சிரிக்கிறேன்!" என்றான்.

"அப்படி யென்றால்?......"

"என்னைத் தேடி வந்தவர்களின் காலடிச் சத்தத்தைச் சற்று முன் நீ கேட்கவில்லையா? அவர்கள் ஏமாந்து போனதை எண்ணிச் சிரிக்கிறேன்!"

அவள் சிறிது பயத்துடன் "உன்னை யாராவது தேடி வருகிறார்களா, என்ன? எதற்காக?" என்றாள்.

"இல்லாவிட்டால் எதற்காக இந்தக் குருட்டு இருட்டில் மதிள் சுவரில் வந்து மோதிக்கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும்?"

அச்சமயம் காற்றின் அசைவில் மரக் கிளைகள் விலகி நிலாக் கதிர் ஒன்று வந்தியத்தேவனுடைய முகத்தின் மீது விழுந்தது.

அந்தப் பெண் சற்று வியப்புடனும் திகைப்புடனும் அவனைப் பார்த்தாள்.

"என்ன பார்க்கிறாய்?" என்று கேட்டான்.

"நீ, நீதானா என்று பார்த்தேன்!"

# செல்வன்

"நான், நான் இல்லாவிட்டால், வேறு யாராயிருப்பேன்?"

"போன தடவை நீ வந்திருந்தபோது பெரிய மீசை வைத்திருந்தாயே!"

"நல்ல கேள்வி கேட்கிறாய்? என்னைப்போல் சுவர் ஏறிக் குதித்து வருகிறவன் அடிக்கடி வேஷத்தை மாற்றிக் கொள்ளாவிட்டால் எப்படி?"

"முன்னைக்கு இப்போது இளமையாய்த் தோன்றுகிறாயே?"

"உற்சாகம் இருக்கும் போது இளமைதானே வருகிறது!"

"அப்படி உனக்கு என்ன உற்சாகம் வந்தது?"

"உங்கள் மகாராணியின் தயவு இருக்கும் போது உற்சாகத்துக்கு என்ன குறைவு?"

"பரிகாசம் செய்ய வேண்டாம். இன்றைக்கு எங்கள் எஜமானி இளைய ராணிதான். ஒரு நாள் நிச்சயமாக மகாராணி ஆவார்கள்!"

"அதைத்தான் நானும் சொல்லுகிறேன்."

"இதுதானா சொல்லுவாய்? உன்னுடைய மந்திர சக்தியினால்தான் மகாராணி ஆனார்கள் என்று கூடச் சொல்லுவாய்! பாதி ராஜ்யத்தைக் கொடு என்று கேட்டாலும் கேட்பாய்!"

வந்தியத்தேவன் அறிய விரும்பியதை ஒருவாறு அறிந்து கொண்டான். பிறகு அவன் ஒன்றும் பேசவில்லை. தீவிரமாக யோசித்துக் கொண்டே நடந்தான்.

தான் சந்திக்கப் போகிறது யாரை? பழுவூர் இளையராணியாயிருக்கலாம். அல்லது மதுராந்தகத் தேவரை மணந்துகொண்ட சின்னப் பழுவேட்டரையரின் மகளாயிருக்கலாம்.

**கல்கி**

தன்னை மந்திரவாதி யென்று எண்ணி அந்தப் பெண் அழைத்துக்கொண்டு போகிறாள். போய், அந்த 'இளையராணி' யாராயிருந்தாலும், அவளைச் சந்திக்கும்போது எப்படி நடந்துகொள்வது?—நெஞ்சே! தைரியத்தைக் கைவிடாதே! தைரியம் உள்ள வரையில் ஜயமும் உண்டு! சமயத்தில் ஏதேனும் யுக்தி தோன்றாமல் போகாது! இது வரையில் எந்த நெருக்கடியிலும் நாம் தோல்வியுற்று வந்ததில்லை. அதிலும் பெண் பிள்ளை ஒருத்தியிடமா தோல்வியடையப் போகிறோம்?

ஒரு பெரிய மாளிகையை அவர்கள் நெருங்கிச் சென்றார்கள். ஆனால் மாளிகையின் முன் வாசலை நோக்கிச் செல்லவில்லை. பின்புற வாசலையும் நெருங்கவில்லை. மாளிகையின் ஒரு பக்கத்தில் தோட்டத்துக்குள் நீட்டி விட்டிருந்த சிருங்கார லதா மண்டபத்தை நெருங்கினார்கள். இன்னும் அருகில் நெருங்கியபோது அந்த லதா மண்டபம் இரண்டு பெரிய பிரம்மாண்டமான மாளிகைகளை ஒன்று சேர்க்கும் பாதையைப்போல் அமைந்திருந்தது. அப்படிச் சேர்க்கப் பட்ட இரு கட்டிடங்களும் ஒரு விதத்தில் மாறுபட்டிருந்தன. வலது புறத்து மாளிகை அதன் உள்ளே சுடர் விட்டு எரிந்த பல தீபங்களினால் ஜொலித்துக் கொண்டிருந்தது. உள்ளிருந்து பல வித கல கலப்பான தொனிகள் வந்து கொண்டிருந்தன. இடது புறத்துக் கட்டிடத்திலோ ஒரு சின்னஞ் சிறு தீபம் கூட எரியவில்லை. நிலா வெளிச்சத்தில் அதன் வெளிச் சுவர்கள் நெடிதுயர்ந்து தெரிந்தன. ஆனால் அந்த மாளிகையின் உள்ளே நிசப்தமும் இருளும் குடிகொண்டிருந்தன.

வந்தியத்தேவனை அழைத்துக் கொண்டு வந்த பெண் லதா மண்டபத்தை அணுகியதும் அவனைப் பார்த்துச் சமிக்ஞையினால் அங்கேயே நிற்கும்படி சொன்னாள். அவனும் அப்படியே நின்றான். அவ்விதம் நின்ற போதுதான் அந்த இடத்




தில் நிறைந்திருந்த மலர்களின் நறு மணத்தை அவன் உணர்ந்தான். அப்பப்பா! என்ன வாசம்! என்ன வாசம்! மூக்கில் நெடி போல ஏறித் தலையைக் கிறுகிறுக்க அடிக்கிறதே!

அந்தப் பெண் லதா மண்டபத்துக்குள் நுழைந்ததும், அவளுடைய குரலும் இன்னொரு இனிய பெண் குரலும் கேட்டன. "வரச்சொல் உடனே! கேட்பானேன்? நான்தான் இத்தனை நேரமாய்க் காத்திருக்கிறேன் என்று தெரியுமே?'' என்ற சொற்கள் அவனுக்கு மயக்கத்தை உண்டாக்கின. அந்தக் குரல் பழுவூர் இளைய ராணியின் குரல்தான்! சந்தேகமில்லை! அடுத்த கணம் அவள் முன்னால் போய் நிற்கப் போகிறோம். அந்த நிலைமையை எவ்விதம் சமாளிக்கப் போகிறோம்? எதிர்பார்த்த மந்திரவாதிக்குப் பதிலாகப் பல்லக்கில் வந்து மோதிய மனிதன் வந்து நிற்பதைக் கண்டு அவள் என்ன நினைப்பாள்? ஆச்சரியப் படுவாளா? கோபம் கொள்வாளா? ஒருவேளை மகிழ்ச்சி அடைவாளா?...அல்லது எந்த வித உணர்ச்சியையும் வெளியில் காட்டாமல் நடந்து கொள்வாளா?

அவனை அழைத்து வந்த மங்கை லதா மண்டபத்து வாசலில் நின்றபடி சமிக்ஞையால் அழைத்தாள்.

வந்தியத்தேவன் அவள் நின்ற இடத்தை அடைந்து மண்டபத்தின் உட்புறம் நோக்கினான். ஒரு நொடிப் பொழுதில் அங்கே தோன்றிய காட்சி அவன் கண் வழியாக மனதில் பதிந்தது. தங்க விளக்கு ஸ்தம்பத்தில்



ஒளிர்ந்த தீபச் சுடர் பொன் ஒளியைப் பரப்பியது. ஏதோ ஒரு அபூர்வமான வாசனைத் தைலத்தை அந்த விளக்கில் விட்டிருக்க வேண்டும். ஆகலின் தீபச் சுடரின் புகை கமகமவென்று மணம் வீசிற்று. பல வர்ண நறுமண மலர்களைப் பரப்பிய சப்ரகூட மஞ்சத்தில் ஒரு பெண் ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டு வீற்றிருந்தாள். அவள் பழுவூர் இளைய ராணிதான். பகலில் பல்லக்கில் பார்த்தபோது அவள் அழகியாகத் தோன்றினாள். இரவில் தங்கக் குத்து விளக்கின் வெளிச்சத்தில் அழகென்னும் தெய்வமே உருவெடுத்தது போலக் காணப்பட்டாள். மலரின் மணமும் விளக்கின் புகை மணமும் பழுவூர் இளைய ராணியின் மோகன உருவமும் சேர்ந்து வந்தியத்தேவனைப் போதை கொள்ளச் செய்தன.

வந்தியத்தேவா! ஜாக்கிரதை! ஒரே ஒரு தடவை நீ மது பானம் செய்தாய்! உன் அறிவு கலங்குவதை அறிந்தாய்! பிறகு மதுவைத் தொடுவதில்லை என்று சபதம் செய்தாய்! இப்போது அதை ஞாபகப் படுத்திக்கொள்! மதுவின் போதையைக் காட்டிலும் சக்தி வாய்ந்த இந்த மயக்கத்தில் உன் அறிவைப் பறிகொடுத்து விடாதே!

வந்தியத்தேவனைப் பார்த்த பழுவூர் இளைய ராணி நந்தினி அவனுடைய பவழ இதழ்கள் சிறிது விரிந்து முத்துப் பற்களை வெளிக் காட்டும்படி வியப்புடன் நோக்கிக் கொண்டிருந்தாள். பேச முடியாத நிலையை அவள் அச்சமயம் அடைந்திருந்தது வந்தியத்தேவனுக்கு அனுகூலமாகப்போயிற்று.

இலேசாக அவன் ஒரு சிரிப்புச் சிரித்து விட்டு, "அம்மணி! தங்கள் தாதிப் பெண்ணுக்குத் திடீரென்று சந்தேகம் வந்து விட்டது;— நான் மந்திரவாதியா இல்லையா என்று! அதை எப்படிக் கேட்டாள் என்று நினைக்கிறீர்கள்? 'நீ நீதானா?' என்று கேட்டாள்!" என்று சொல்லி மறுபடியும் சிரித்தான்.

நந்தினி புன்னகை புரிந்தாள். வந்தியத்தேவனுடைய கண் முன்னால் ஒரு மின்னல் மின்னியது! அது தேனைச் சொரிந்தது.

"இவளுக்கு அப்படித்தான் ஏதாவது சந்தேகம் திடீர் திடீர் என்று வந்துவிடும்! வாஸுகி! ஏன் இங்கேயே மரம்போல நிற்கிறாய்? உன் இடத்துக்குப் போ! யாராவது வரும் காலடிச் சத்தம் கேட்டால் கதவைப் படீரென்று சாத்து!" என்றாள் நந்தினி.

"இதோ, அம்மா!" என்று சொல்லி விட்டு, வாஸுகி லதா மண்டபத்தின் உள் வழியாகப் பிரகாச மாளிகைக்குச் சென்ற நடை பாதையில் நடந்து போய்ச் சற்றுத் தூரத்தில் மங்கலாகத் தெரிந்த வாசற்படியண்டை உட்கார்ந்து கொண்டாள்.

நந்தினி சிறிது குரலைத் தாழ்த்திக் கொண்டு, "உன்னை மந்திரவாதியில்லையென்று இவள் சந்தேகித்தாள்? அசட்டுப் பெண்! 'மந்திரவாதிகள்' என்று சொல்லிக் கொள்கிறவர்களில் முக்கால் வாசிப் பேர் வெறும் பொய்யர்கள். நீதான் உண்மை மந்திரவாதி! என்ன மாயமந்திரம் செய்து இந்தச் சமயத்தில் இங்கே வந்தாய்?" என்று கேட்டாள்.

"அம்மணி! மாய மந்திரம் செய்து நான் இங்கு வரவில்லை. சுவர்மீது சாத்தியிருந்த ஏணிமேல் ஏறித்தான் வந்தேன்!" என்றான் வந்தியத்தேவன்.

"அதுதான் தெரிகிறதே! இந்தப் பெண்ணை என்ன மாயமந்திரம் செய்து ஏமாற்றினாய் என்று கேட்டேன்."

"நிலா வெளிச்சத்தில் ஒரு புன்னகை புரிந்தேன். அவ்வளவுதான்! அதற்குச் சரிப்பட்டு வராவிட்டால், தாங்கள் கொடுத்த மந்திர மோதிரத்தைக் காட்ட எண்ணியிருந்தேன்."

"அதைப் பத்திரமாய் வைத்திருக்கிறாய் அல்லவா? அந்த மோதிரம் இருக்கும்போது பட்டப் பகலில் பகிரங்கமாக இங்கே வந்திருக்கலாமே? எதற்காக இந்தக் குருட்டு வழியில் திருட்டுத்தனமாக வந்தாய்?"

"அம்மணி! தங்கள் மைத்துனர் இருக்கிறாரே, சின்னப் பழுவேட்டரையர், அவருடைய ஆட்கள் சுத்தத் திருடர்கள். முதலில் என்னுடைய உடைகளையும் உடைமைகளையும் திருடப் பார்த்தார்கள். பிறகு என்னைப் பின் தொடர்ந்து ஒரு கணம் கூடப் பிரியாமல் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களிடமிருந்து பிரியப்பட்ட பாடு பெரும் பாடாகப் போயிற்று. பிரிந்த பிறகு சந்து பொந்துகளில் புகுந்து தங்களுடைய மாளிகை மதிள் சுவரைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில் சுவர் மேல் வைத்த ஏணியைப் பார்த்ததும் தாங்கள்தான் இந்த ஏழையை நினைவு கூர்ந்து இந்த ஏற்பாடு செய்திருக்கிறீர்கள் என்று எண்ணி விட்டேன். அது தவறு என்று தெரிந்து கொண்டேன். மன்னிக்க வேண்டும்."

"மன்னிப்பதற்கு அவசியம் ஒன்றும் ஏற்படவில்லையே!"

"அது எப்படி, அம்மணி!"

"நீ நினைத்தது அவ்வளவாகத் தவறும் இல்லை. மந்திரவாதியை எதற்காக நான் தருவிக்க நினைத்தேன், தெரியுமா?"

"தெரியவில்லை, அம்மணி! எனக்கு மந்திரமும் தெரியாது; ஜோசியமும் தெரியாது!"

"உன்னை நேற்றுக் காலையில் பார்த்தது முதல் உன்னுடைய ஞாபகமாகவே இருந்தது. நீ ஏன் இன்னும் என்னைப் பார்க்க வரவில்லையென்று தெரிந்து கொள்ள விரும்பினேன். அதற்காகவேதான் நான் மந்திரவாதியைக் கூப்பிட்டனுப்பினேன்."

"மிக்க ஆச்சரியமாயிருக்கிறது."

"எது?"

"இப்போது நீங்கள் சொன்னது தான். நேற்று உங்களைப் பார்த்தது முதல் எனக்கும் உங்கள் ஞாபக மாகவே இருந்தது!"

"பூர்வ ஜன்ம வாசனையில் உனக்கு நம்பிக்கை உண்டா?"

"அப்படியென்றால்?"

"பூர்வ ஜன்மத்தில் இரண்டு பேருக்கு நட்போ, உறவோ இருந்தால், இந்த ஜன்மத்திலும் அத்தகைய தொடர்பு ஏற்படும் என்கிறார்களே, அதைத் தான் சொல்லுகிறேன்."

"நேற்றுவரையில் எனக்கு அந்த நம்பிக்கை இல்லை. நேற்றுத்தான் அதில் நம்பிக்கை பிறந்தது."

இவ்விதம் வந்தியத்தேவன் கூறிய போது வெளிப்படையாகப் பொய் சொன்னான் என்றாலும், மனதிற்குள் குடந்தை ஜோதிடர் வீட்டில் பார்த்த பெண்ணை நினைத்துக் கொண்டுதான் சொன்னான். ஆனால் நந்தினிக்கு அதைப் பற்றிய விவரமே தெரிய இடமில்லை யல்லவா? தன்னைப்பற்றிச் சொல்வ தாகவே நினைத்துக் கொண்டாள்.

"ஆனால் அதற்காக நீ என்னைப் பார்க்க வரவில்லையே? ஏதோ ஆழ்வார்க்கடியார் நம்பி என்பவர் செய்தி சொல்லி அனுப்பியதாக......"

"ஆம், அம்மணி! அவர் சொல்லி அனுப்பிய செய்தியைத் தங்களிடம் சொல்வதற்காகவே முதலில் தங்களைப் பார்க்க விரும்பினேன். தங்களை ஒரு முறை பார்த்த பிறகு, பழைய காரண மெல்லாம் மறந்து போய் விட்டது."

"ஆழ்வார்க்கடியாரை நீ எங்கே பார்த்தாய்? என்ன செய்தி சொல்லி யனுப்பினார்!"

"வீரநாராயண புரத்துக்கு அருகில் ஆழ்வார்க்கடியார் நம்பியைச் சந்தித்தேன். அவர் தன் கைத் தடியின் சக்தியைக் கொண்டு விஷ்ணுதான் பெரிய தெய்வம் என்று மெய்ப்பிக்க முயன்றார். அச் சமயத்தில் பெரிய பழுவேட்டரையரின் பரிவாரங்கள் வந்தன. அவரைத் தொடர்ந்து தங்கள் பல்லக்கும் வந்தது. அங்கே என்ன ரகளை என்று பார்ப்பதற்காகவோ என்னமோ, தங்களுடைய ஒரு பொற் கரம் பல்லக்கின் திரையை விலக்கிற்று. அப்போதுதான் தாங்கள் என்று தெரிந்து கொண்டு ஆழ்வார்க் கடியார் தங்களுக்கு ஒரு செய்தி அனுப்ப விரும்பினார். நானும் அன் றிரவு கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் தங்கியபடியால் என்னிடம் செய்தி சொல்லி அனுப்பினார். ஆனால் கடம்பூரில் தங்களை நான் பார்க்க முடியவில்லை. தஞ்சாவூர்க் கோட்டைக் கருகில் சாலையில்தான் சந்திக்க முடிந்தது. அதுவும் தங்கள் பல்லக்கு என் குதிரைமேல் மோதியதினால்தான்!"

இவ்விதம் வந்தியத்தேவன் சொல்லி வந்தபோது நந்தினி மேலே அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தாள். ஆகையால் அவளுடைய முக பாவத்தி லிருந்து ஒன்றும் கண்டு பிடிக்க முடிய வில்லை. கடைசியில் வந்தியத் தேவன் சொன்னதைக் கேட்டதும் அவனைத் திரும்பிப் பார்த்து ஒரு மோகனப் புன்னகை புரிந்தாள். "ஆமாம்; நான் ஏறும் பல்லக்கு வெகு பொல்லாத பல்லக்குதான்!" என்றாள்.

## அத்தியாயம் 35

# மந்திரவாதி

தூரத்தில் பேரிகைகளின் பெரு முழக்கம் கேட்டது. எக்காளங்கள் சப்தித்தன. மனிதர்களின் குரல்கள் ஜயகோஷம் செய்தன. கோட்டைக் கதவுகள் திறந்து மூடிக் கொள்ளும் சத்தமும், யானைகள் குதிரைகளின் காலடிச் சத்தமும் எழுந்தன.

நந்தினியின் கவனத்தை அந்தச் சத்தங்கள் கவர்ந்தன என்பதை வந்தியத் தேவன் அறிந்து கொண்டான். காவல் புரிந்த தாதிப் பெண் திடுக்கிட்டு எழுந்து சற்று அருகில் வந்து "அம்மா! எஜமான் வந்து விட்டார் போலிருக்கிறது!" என்றாள்.

நந்தினி "எனக்குத் தெரியும்; நீ உன் இடத்துக்குப் போ!" என்றாள்.

பிறகு வந்தியத் தேவனைப் பார்த்து, "தனாதிகாரி கோட்டையில் பிரவேசிக்

கிறார். சக்கரவர்த்தியின் க்ஷேமத்தை விசாரித்துவிட்டு, கோட்டைத் தளபதியைப் பார்த்துப் பேசிவிட்டு, இங்கே வருவார். வருவதற்குள் நீ போய்விட வேண்டும். ஆழ்வார்க் கடியார் கூறிய செய்தி என்ன?'' என்று வினவினாள்.

"அம்மணி! அந்த வீர வைஷ்ணவ சிகாமணி தங்களை அவருடைய சகோதரி என்று சொல்லிக் கொண்டார்; அது உண்மைதானா?'' என்று வல்லவரையன் கேட்டான்.

"அதைப்பற்றி நீ ஏன் சந்தேகப் படுகிறாய்?''

"பச்சைக் கிளியும் கடுவன் குரங்கும் ஒரு தாயின் குழந்தைகள் என்றால் எளிதில் நம்ப முடியுமா?''

நந்தினி சிரித்து விட்டு, "ஒரு விதத்தில் அவர் சொன்னது உண்மைதான். நாங்கள் ஒரே வீட்டில், ஒரே குடும்பத்தில் வளர்ந்தோம். உடன் பிறந்த தங்கையைப் போலவே என்னிடம் பிரியம் வைத்திருந்தார். பாவம்! அவருக்குப் பெரும் ஏமாற்றம் அளித்து விட்டேன்!''

"அப்படியானால் சரி! ஆழ்வார்க் கடியார் தங்களுக்குச் சொல்லி அனுப்பிய செய்தி கிருஷ்ண பகவான் தங்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார் என்பதுதான். தாங்கள் கண்ணனை மணந்துகொள்ளும் கலியாணக் காட்சியைப் பார்க்க வீர வைஷ்ணவ பக்த கோடிகளும் காத்துக் கொண்டிருக்கிறார்களாம்!''

நந்தினி ஒரு பெரு மூச்சு விட்டாள். "ஆகா! இன்னும் அவருக்கு அந்தச் சபலம் நீங்கவில்லை போலிருக்கிறது. நீ அவரைப் பார்த்தால் எனக்காக இதைச் சொல்லிவிடு. என்னை அடியோடு மறந்து விடச் சொல்லு! ஆண்டாளைப் போல் பரம பக்தையாகக் கொஞ்சமும் தகுதியற்றவள் நான் என்று சொல்லு!''

"நான் அதை ஒப்புக் கொள்ளவில்லை, அம்மா!''

"என்னத்தை ஒப்புக்கொள்ளவில்லை?''

"தாங்கள் ஆண்டாள் ஆக முடியாது என்பதைத்தான் ஒப்புக் கொள்ளவில்லை. ஆண்டாள் பக்தி செய்து, பாட்டுப் பாடி, அழுது கண்ணீர்விட்டு, பூமாலை தொடுத்துச் சூட்டி,—இப்படியெல்லாம் செய்து கண்ணனை மணந்து கொள்ளவேண்டியிருந்தது. ஆனால் தங்களுக்கு அத்தகைய கஷ்டமே தேவையில்லை. தங்களைக் கிருஷ்ண பகவான் பார்த்துவிட வேண்டியதுதான். ருக்மணி, சத்தியபாமாவையும், ராதையையும் கோபிகா ஸ்திரீகளையும் உடனே கைவிட்டு அவர்கள் வீற்றிருந்த சிம்மாசனத்தில் தங்களை ஏற்றி உட்கார வைத்து விடுவார்!''

"ஐயா! நீர் முகஸ்துதி செய்வதில் சமர்த்தராயிருக்கிறீர்! அது எனக்குப் பிடிப்பதேயில்லை.''

"அம்மணி! முகஸ்துதி என்றால் என்னவோ?''

"முகத்துக்கு நேரே ஒருவரைப் புகழ்வதுதான்.''

"அப்படியானால் சற்றே நீங்கள் திரும்பி முதுகைக் காட்டிக் கொண்டு உட்காருங்கள்......''

"எதற்காக?''

"முகத்தைப் பார்க்காமல் முதுகைப் பார்த்துக் கொண்டு புகழ்ச்சி கூறுவதற்காகத்தான். அதில் ஒன்றும் தவறு இல்லையல்லவா?''

"நீர் பேச்சில் மிக கெட்டிக்காரராயிருக்கிறீர்.''

"இப்போது தாங்கள் அல்லவா முகஸ்துதி செய்கிறீர்கள்?''



"நீரும் உமது முகத்தைத் திருப்பிக் கொண்டு, முதுகைக் காட்டுவதுதானே?''

"மகாராணி! போர்க்களத்திலாகட்டும், பெண்மணிகளிடமாகட்டும், நான் முதுகு காட்டுவது எப்போதும் கிடையாது. தாங்கள் தாராளமாய் என்னை முகஸ்துதி செய்யலாம்!''

இதைக் கேட்டு விட்டு நந்தினி 'கலீர்' என்று சிரித்தாள்!

"நீர் மந்திரவாதிதான்; சந்தேகமில்லை. நான் இம்மாதிரி வாய்விட்டுச் சிரித்து வெகு காலம் ஆயிற்று!" என்று சொன்னான்.

"ஆனால், அம்மணி! தங்களைச் சிரிக்கப் பண்ணுவது வெகு அபாயம்! தடாகத்தில் தாமரை சிரித்து மகிழ்ந்தது; தேன் வண்டு மயங்கி விழுந்தது!" என்றான் வந்தியத்தேவன்.

"நீர் மந்திரவாதி மட்டுமல்ல; கவியும் போலிருக்கிறதே!"

"நான் முகஸ்துதிக்கும் அஞ்சமாட்டேன்; வசவுக்கும் கலங்கமாட்டேன்."

"உம்மை யார் வைதது?"

"சற்று முன் என்னைக் 'கவி' என்றீர்களே?"

"அப்படியென்றால்?..."

"நான் சிறுவனாயிருந்த போது என்னைச் சிலர் 'குரங்கு மூஞ்சி!' என்று சொல்வதுண்டு. வெகு நாளைக்குப் பிறகு இன்றைக்குத்தான் தங்களுடைய பவளச் செவ்வாயினால் அதைக் கேட்டேன்."

"உம்மையா 'குரங்கு மூஞ்சி' என்றார்கள்? யார் அப்படிப்பட்ட புத்திசாலிகள்?"

"அவர்களில் யாரும் இப்போது உயிரோடில்லை."

"உம்மை நான் அவ்விதம் சொல்லவில்லை. கவி பாடக்கூடியவர் போலிருக்கிறதே என்று சொன்னேன்."

"கொஞ்சம் கவியும் பாடுவேன். ஆனால் பகைவர்களுக்கு முன்னால் தான் பாடுவேன். வில்லம்பினால் சாகாதவர்கள் சொல்லம்பினால் சாகட்டும் என்று!"

"ஐயா, கவிராஜ வீரசிங்கமே! உம்முடைய பெயர் என்னவென்று இன்னமும் சொல்லவில்லையே?"

"என் சொந்தப் பெயர் வந்தியத்தேவன்; பட்டப் பெயர் வல்லவரையன்."

"அரசர் குலத்தினரா?"

"பழைய புகழ்பெற்ற வாணதிராஜர் குலத்தில் வந்தவன்!"

"இப்போது உங்கள் ராஜ்யம்?..."

"மேலே ஆகாசம்; கீழே பூமி; இப்போது நான் சகல பூமண்டலத்துக்கும் ஏக சக்ராதிபதி!"



நந்தினி சிறிது நேரம் வல்லவரையனை ஏறத் தாழப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"அப்படி ஒன்றும் நடக்காத காரியம் இல்லை. உம்முடைய பூர்விக ராஜ்யத்தை நீர் திரும்பவும் பெறலாம்."

"அது எப்படி சாத்தியம்? புலியின் வயிற்றுக்குள்ளே போனது திரும்பவும் வருமா? சோழ சாம்ராஜ்யத்தில் சேர்ந்த அரசு திரும்பக் கிடைக்குமா?"

"கிடைக்கும்படி செய்ய என்னால் முடியும்."

"அம்மணி! வேண்டாம்! இராஜ்யம் ஆளும் ஆசை எனக்கு எப்போதும் கிடையாது. கொஞ்சம் இருந்ததும் இன்றைக்குச் சுந்தர சோழ சக்கரவர்த்தியைப் பார்த்த பிறகு அடியோடு போய் விட்டது. இம்மாதிரி பிறர் கையை எதிர்பார்த்துச் சக்கரவர்த்தியா யிருப்பதைக் காட்டிலும் மறுநாள் உணவு எங்கே கிடைக்கும் என்று தெரியாத சுதந்திர மனிதனாயிருப்பதே மேல்."

"என்னுடைய கருத்தும் அதுதான்!" என்றாள் நந்தினி. பிறகு ஏதோ மறந்து போன விஷயத்தை ஞாபகப்படுத்திக் கொண்டவள்போல், "சின்னப் பழு

வேட்டரையரின் ஆட்கள் உம்மை எதற்காகத் தேடுகிறார்கள்?" என்று கேட்டாள்.

"தங்களுடைய தாதிப் பெண்ணைப் போல் அவருக்கும் என்பேரில் சந்தேகம் உண்டாகி விட்டது."

"என்ன சந்தேகம்?"

"பனை இலச்சினை உள்ள முத்திரை மோதிரம் என்னிடம் எப்படி வந்தது என்று."

நந்தினியின் முகத்தில் பயத்தின் சிறிய சாயல் தென்பட்டது.

"மோதிரம் எங்கே?" என்று திடுக்கிட்ட குரலில் கேட்டாள்.

"இதோ இருக்கிறது, அம்மணி! இலேசில் அதைப் போக்க அடித்து விடுவேனா?" என்று கூறிக்கொண்டே மோதிரத்தை எடுத்துக் காட்டினான்.

"இது உம்மிடம் இருப்பது அவருக்கு எப்படித் தெரிந்தது?" என்று நந்தினி கேட்டாள்.

"சுந்தர சோழ சக்கரவர்த்தியைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை என் மனதில் நெடுநாளாக இருந்தது. அதற்கு இந்த முத்திரை மோதிரத்தை உபயோகப் படுத்திக் கொண்டேன். பார்த்து முடிந்த பிறகு இந்த மோதிரம் என்னிடம் எப்படி வந்தது என்று கோட்டைத் தளபதி கேட்டார்......"

"நீ என்ன சொன்னாய்!" என்று நந்தினி வினவிய குரலில் திகில் தொனித்தது.

"தங்கள் பெயரைச் சொல்லவில்லை, அம்மணி! பெரிய பழுவேட்டரையர் கொடுத்தார் என்று சொன்னேன். கடம்பூர் மாளிகையில் கொடுத்தார் என்றும் சொன்னேன்......"

அவள் முகத்திலும் குரலிலும் இருந்த திகில் நீங்கியது.

"நீ சொன்னதை அவர் நம்பினாரா?" என்று கேட்டாள்.

நந்தினி பெருமூச்சு விட்டாள்.

"முழுதும் நம்பியதாகத் தெரியவில்லை. அதனால்தானே என்னைப் பின் தொடரும்படி ஆட்களை விட்டிருக்க வேண்டும்? தமையனார் திரும்பி வந்ததும் என்னை அவர் முன்னால் நிறுத்தி உண்மையை அறிய எண்ணியிருக்கலாம்!" என்றான் வந்தியத்தேவன்.

நந்தினி புன்னகை புரிந்து, "பெரிய பழுவேட்டரையரிடம் நீ பயப்பட வேண்டாம். அவர் உன்னைக் கடித்துத் தின்று விடாமல் நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றாள்.

"அம்மணி! தனாதிகாரியின் பேரில் தங்களுடைய செல்வாக்கு எவ்வளவு என்பது உலகம் அறிந்த செய்தி. ஆனால் எனக்கு வெளியில் அவசர காரியம் இருக்கிறது. ஆகையினால்தான் தப்பிச் செல்லத் தங்கள் உதவியைக் கோருகிறேன்."

"அப்படி என்ன அவசர வேலை இருக்கிறது?"

"எத்தனையோ இருக்கிறது. உதாரணமாக, ஆழ்வார்க்கடியாரைப் பார்த்துத் தங்கள் மறுமொழியைச் சொல்ல வேண்டும். அவருக்கு என்ன சொல்லட்டும்?"

"அவருக்கு 'நந்தினி என்று ஒரு சகோதரி இருந்தாள்' என்பதை அடியோடு மறந்துவிடும்படி சொல்லு!"

"சொல்லிவிடலாம்; ஆனால் நடக்கிற காரியமில்லை."

"எது?"

"தங்களை மறப்பதுதான். இரண்டு தடவை தற்செயலாகப் பார்த்த என்னாலேயே தங்களை மறக்க முடியாது போலிருக்கிறதே! வாழ்நாளெல்லாம் தங்களோடு இருந்தவரால் எப்படி மறக்க முடியும்?"

நந்தினியின் முகத்தில் வெற்றிப் பெருமிதத்தின் சாயல் பரிணமித்தது. அவளுடைய வேல் விழிகள் வந்தியத்தேவனுடைய நெஞ்சை ஊடுருவின போல் நோக்கின.

"சக்கரவர்த்தியைப் பார்ப்பதற்கு நீர் ஏன் அவ்வளவு ஆவல் கொண்டிருந்தீர்?" என்று கேட்டாள்.

"உலகப் பிரசித்தி பெற்ற அந்தச் சுந்தர புருஷரைப் பார்க்க நான் விரும்பியதில் வியப்பு என்ன? உலகத்தில் வீர மன்னர்கள் தங்கள் வீரமும் பௌருஷமும் பெருக வேண்டும் என்றும், இராஜ்யமும் கீர்த்தியும் விஸ்தரிக்க வேண்டும் என்றும் விரும்புவார்கள். அவ்விதமே பிரஜைகளைப் பிரார்த்தனை செய்யும்படியும் சொல்வார்கள். ஆனால் நம்முடைய சக்கரவர்த்தியைப் பற்றிப் புத்த பிக்ஷுக்களின் மடங்களில் என்ன பிரார்த்தனை செய்கிறார்கள்?

'......................சுந்தரச்
சோழர் வண்மையும் வனப்பும்
திண்மையும் உலகிற் சிறந்து வாழ்
கெனவே'

என்று பிரார்த்தனை செலுத்துகிறார்கள். இத்தகைய கலியுக மன்மதனைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு வெகு நாளாக ஆசையாயிருந்தது..."

"ஆமாம்; சக்கரவர்த்திக்குத் தம்முடைய அழகைப் பற்றி ரொம்பப் பெருமைதான். அவருடைய செல்வக் குமாரிக்கு அதைவிட அதிக கர்வம்..."

"குமாரியா? யாரைச் சொல்லுகிறீர்கள்?"

"பழையாறையில் இருக்கிறாளே, ஒரு அகம்பாவம் பிடித்த கர்வி,—அந்த இளையபிராட்டி குந்தவை தேவியைத்தான் சொல்லுகிறேன்."

வந்தியத் தேவா! நீ அதிர்ஷ்டக்காரன். நீ தேடிக் கொண்டிருந்த உபாயம் இதோ உன் முன்னால் தானே வந்து நிற்கிறது! அதை நன்கு உபயோகப்படுத்திக் கொள்! — இவ்வாறு வல்லவரையன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.

இத்தனை நேரமும் ஒய்யாரமாகப் படுக்கையில் சாய்ந்து படுத்திருந்த நந்தினி திடீரென்று எழுந்து நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

"ஐயா! நான் ஒன்று சொல்கிறேன். அதை ஒப்புக் கொள்வீரா?" என்று கேட்டாள்.

"சொல்லுங்கள், அம்மணி!"

"நீரும் நானும் ஓர் உடன்படிக்கை செய்து கொள்ளலாம். நீர் எனக்கு உதவி செய்யவேண்டியது; நான் உமக்கு உதவி செய்யவேண்டியது. என்ன சொல்கிறீர்!"

"அம்மணி! தாங்கள் சோழ மகா ராஜ்யத்தில் சர்வ சக்தி வாய்ந்த தனாதிகாரியின் ராணி. நினைத்ததை நினைத்தபடி சாதிக்கக்கூடிய சக்தி வாய்ந்தவர். நானோ ஒருவித செல்வாக்கும் இல்லாதவன். தங்களுக்கு நான் என்ன விதத்தில் உதவிசெய்ய முடியும்!" என்றான்.

அவன் உள்ளத்திலிருந்து பேசுகிறானா, உதட்டிலிருந்து பேசுகிறானா என்று தெரிந்துகொள்ள விரும்பிய நந்தினி தன் கூரிய விழிகளை அவன் மீது செலுத்தினாள்.

வந்தியத் தேவன் அதற்குச் சிறிதும் கலங்காமல் நின்றான்.

"எனக்கு அந்தரங்கமான பணி ஆள் ஒருவர் தேவையாயிருக்கிறது. இந்த அரண்மனையில் உமக்கு வேலை வாங்கிக் கொடுத்தால், ஒப்புக் கொள்வீரா?" என்று கேட்டாள்.

"இதேமாதிரி சேவையை இன்னொரு மாதரசிக்குச் செய்வதாக ஏற்கெனவே ஒப்புக்கொண்டு விட்டேன். அவள் வேண்டாமென்று நிராகரித்தால் தங்களிடம் வருகிறேன்."

"அது யார் அவள், என்னோடு போட்டிக்கு வருகிறவள்?"

"சற்று முன் மிகப் பிரியத்தோடு பேசினீர்களே? அந்த இளையபிராட்டி குந்தவை தேவிதான்!"

"பொய்! பொய்! அப்படி ஒரு நாளும் இருக்க முடியாது! என்னை வேடிக்கை செய்யப் பார்க்கிறீர்......!"

"மகாராணி! இந்த ஓலையை ஏற்கெனவே பலர் திருடிப் பார்த்து விட்டார்கள். ஆகையால் தாங்களும் இதைப் பார்ப்பதினால் மோசம் ஒன்றும் வந்து விடாது!" என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் ஆதித்த கரிகாலர் குந்தவைக்குக் கொடுத்த ஓலையை எடுத்து நீட்டினான்.

நந்தினி ஓலையை விளக்கினடியில் பிடித்துக் கொண்டு படித்தாள். படித்து முடித்தபோது அவளுடைய கண்களிலிருந்து கிளம்பிய மின்னல் ஜுவாலை நாக சர்ப்பத்தின் வாயிலிருந்து வெளிவந்து மறையும் அதன் பிளவுபட்ட நாவை வந்தியத் தேவனுக்கு நினைவூட்டியது. அவனை அறியாமல் அவன் உடம்பு நடுங்கியது.

நந்தினி கம்பீர பாவத்துடன் வந்தியத்தேவனைப் பார்த்து, "ஐயா! நீர் இந்தக் கோட்டையிலிருந்து உயிரோடு தப்பிச் செல்ல எண்ணுகிறீர் அல்லவா?" என்று கேட்டாள்.

"ஆம். அம்மா! அதற்குத்தான் தங்கள் உதவியை நாடிவந்தேன்."

"ஒரு நிபந்தனையின் பேரில் தான் உம்மைத் தப்பித்துவிட நான் உதவி செய்யலாகும்."

"நிபந்தனையைச் சொல்லுங்கள்!"

"இந்த ஓலைக்குக் குந்தவை என்ன மறு ஓலை கொடுக்கிறாளோ, அதை



பிரபல தலைவர்களையும் சங்கீத வித்வான்களையும் போல் பேசிப் பாடி நடித்து 'விகடமணி' என்னும் பட்டம் பெற்ற ஸ்ரீ ஆர். கே. மூர்த்தி அவர்களும் ஸ்ரீ எம். எல். வஸந்த குமாரி அவர்களும் சென்ற வாரத்தில் சட்டப்படியும் சாஸ்திர விதிப்படியும் திருமணம் செய்து கொண்டு தம்பதிகளாயினர். இந்தத் திருமணத்தை முன்னிட்டு 31—1—51ல் நடந்த வரவேற்பு வைபவத்துக்குப் பல பிரமுகர்களும் சங்கீத வித்வான்களும் ஸினிமா நட்சத்திரங்களும் விஜயம் செய்து சிறப்பித்தார்கள். தம்பதிகள் நீடூழி வாழ்ந்து சகல நலன்களையும் அடைய வேண்டுமென்று வாழ்த்துகிறோம்.

மறுபடியும் என்னிடம் கொண்டுவந்து காட்டவேண்டும். சம்மதமா?''

"மிக அபாயகரமான நிபந்தனை போடுகிறீர்கள்!''

"அபாயத்துக்கு அஞ்சாதவர் என்று சற்று முன்னால் பெருமை அடித்துக் கொண்டீரே?''

"அபாயத்துக்குத் துணிவது என்றால் அதற்குத் தகுந்த பரிசு கிட்ட வேண்டும் அல்லவா?......''

"பரிசா? பரிசா வேண்டும்? நீர் கனவிலும் அடையக் கருதாத பரிசு உமக்குக் கிடைக்கும். சோழ சாம்ராஜ்யத்தில் இன்று சர்வ சக்தி வாய்ந்தவராய் விளங்கும் பெரிய பழுவேட்டரையர் எந்தப் பரிசுக்காக வருஷக்கணக்காய்த் தவங் கிடக்கிறாரோ, அத்தகைய பரிசு உமக்குக் கிடைக்கும்!'' என்று கூறி நந்தினி வந்தியத்தேவன் பேரில் மறுபடியும் மோகனாஸ்திரத்தைத் தூவினாள்.

பாவம்! வல்லவரையனுடைய தலை சுழன்றது. நெஞ்சே! தைரியத்தைக் கடைப்பிடி! அறிவை இழந்து விடாதே! — என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

அச்சமயம் அவனுக்குத் துணை செய்ய வந்ததைப்போல் அருகிலுள்ள தோட்டத்திலிருந்து ஆந்தையின் கடூரமான குரல் கேட்டது. ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை கேட்டது.

வந்தியத் தேவனுடைய உடம்பு சிலிர்த்தது.

நந்தினி தோட்டத்தில் ஆந்தைக் குரல் வந்த இடத்தை நோக்கி "நிஜ மந்திரவாதியே வந்து விட்டான்!'' என்றாள்.

பிறகு வந்தியத்தேவனைப் பார்த்து, "அவன் எனக்கு இனித் தேவையில்லை. ஆனாலும் இரண்டு வார்த்தை அவனிடம் சொல்லி அனுப்புகிறேன். ஒருவேளை, உன்னைத் தப்பித்து விடுவதற்கும் அவன் உபயோகமாயிருக்கலாம். சற்றுநேரம் நீ அதோ அந்தப் பக்கம் போய், இருட்டில் மறைந்து நில்லு!'' என்று முன்னம் அவளுடைய தாதிப் பெண் போன திசைக்கு நேர் எதிர்த் திசையைக் காட்டினாள். (தொடரும்)



# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 25. மயூராசனம்

மயூரம் என்பது சம்ஸ்கிருத வார்த்தை. மயில் என்று அர்த்தம். மயூராசனம் என்றால் மயிலைப் போன்ற தோற்றமுடைய ஆசனம். இந்த ஆசனத்தைப் பழகினால் மயிலைப் போன்ற ஒயிலையும் பெறலாம். இந்த ஆசனத்தைப் போடும் விதத்தை முன்பு தெரிந்து கொண்டால்தான் இதன் அபூர்வ பலன்களைச் சொன்னால் விளங்கும். மலச் சிக்கலை இது எப்படித் தாக்கி விரட்டுகிறதென்பது விளங்கும்.

மயில் தன் தோகையுடன் கூடிய உடலை, இரண்டு கால்களால் தாங்கியிருப்பதைக் கவனித்திருப்பீர்கள். நம்முடைய இரண்டு கைகளும் கால்களாக உடலைத் தாங்க, கால்கள் இரண்டும் தோகையாகக் கொள்ள வேண்டியது. இந்தக் கட்டுரையில் வெளியாகியிருக்கும் மயூராசனப் படத்தைக் கவனியுங்கள்.

விரிப்பில் முழங்கால்களை மடித்து, முகம்மதியர்கள் தொழுவதைப் போல் மண்டியிட்டு உட்காரவும். இரண்டு கைகளைச் சேர்த்து முழங்காலுக்கு ஒரு ஜாண் தள்ளித் தரையில் பதிய வைக்கவும். இரண்டு சுண்டு விரல்களும் சேர்ந்தாற் போல் பக்கத்தில் இருக்க வேண்டும். விரல்களை முழங்கால் பக்கம் திருப்பி வைக்க வேண்டும். முழங்கை மடித்து முழங்கையை வயிற்றில் ஊன்றவும். தலையும் புஜமும் முன்னுக்கு வர, உடல் பளுவை முழங்கைமேல் தாங்கும்படி செய்ய வேண்டும். இப்படிச் செய்யும் பொழுது முழங்கால்கள் தாமாகவே தரையிலிருந்து மேலே கிளம்பும். கால் பெரு விரல்கள் மட்டும் தரையில் இருக்கும். உடல் இன்னமும் சற்று முன்னுக்கு வந்தால் அவ்விரல்களும் தரையிலிருந்து மேலே கிளம்பும். இப்படிச் செய்து படத்திலுள்ள நிலைக்கு வரவும். மூச்சை சவுகரியம்போல் விடவும் இழுக்கவும் செய்யலாம். முடிந்தமட்டும் இந்த ஆசனத்தில் பத்துப் பதினைந்து விநாடி முதல் அரை, ஒரு நிமிடம்வரை இருக்கலாம். பிறகு கால்கட்டை விரல்களை முதலில், தரையில் ஊன்றிப் பிறகு முழங்கால்களையும் ஊன்றித் தலையை நிமிர்த்திக் கைகளைத் தரையிலிருந்து எடுத்து இளைப் பாறவும். இம்மாதிரி மூன்று முதல் ஆறு தடவை செய்யலாம்.

இதுவரை சொல்லி வந்த ஆசனங்களை விட இது கஷ்டமானது. இதைப் பழகும் அன்பர்களின் மூக்கின் மீது பூமாதேவிக்கு அதிகப் பிரியமுண்டாய்விடும். தலையை முன்னுக்கு நீட்டி, முழங் கால்களைத் தூக்கும் போது மூக்கு அதி வேகமாய்த் தரையுடன் முட்டும். சிலருக்கு முகவாய்க் கட்டை, பல், நெற்றி ஆகிய பல இடங்களில் முட்டும். அவரவர்கள் விழும் விதத்தைப் பொறுத் திருக்கிறது. சிலருக்கு முழங்கைகள் மீது உடல் பளுவை ஏற்றிக் கால்களைத் தூக்கும்போது, முழங்கை நழுவிப் பக்கவாட்டில் நன்றாகச் சருக்கி விழ நேரிடும்.

இவற்றிற்குப் பயந்து சிலர் மூக்குக்கு ஒரு தலையணை, இரண்டு பக்கங்களிலும் இரண்டு தலையணை என்று போட்டுக் கொண்டு மயூராசனம் பழகுவார்கள். சொகுசாக இருப்பவர்கள் ஆரம்பத்தில் அப்படிப் பழகுவதில் குற்றமில்லை. ஆனால் எப்பொழுதும் அப்படியே பழக்கமாக்கிக் கொள்ளக்கூடாது. அப்படிச் செய்தால் மயூராசனம் தலையணை ஆசனமாய்ப் போய்விடும். எப்படியும் இதை விடாமல் பழகிச் சாதித்தே தீருவது என்று கங்கணம் கட்டிக்கொள்ள வேண்டும். சிலருக்கு ஒரு வாரத்திலேயே சரியாய்ச் செய்ய வந்து விடலாம். சிலருக்குப் பல மாதங்களும் ஆகலாம். அவரவர் உடல் நிலையைப் பொறுத்திருக்கிறது.

சிலருக்கு உள்ளங்கை முழங்கால் பக்கம் திருப்பிவைத்து முழங்கையை மடிக்கும் போதே, மணிக்கட்டு நரம்புகள் மணிக்கட்டு முதலியன வலிக்கும். சரீர பளுவை அதன்மேல் தாக்கினால் நரம்புகள் இன்னமும் இழுக்கப்பட்டு மணிக்கட்டில் சுளீர் என்று வலிக்கும். வலிக்கிறதே என்று விட்டுவிடக் கூடாது. இத்தனை நாள் வாளாவிருந்த உடலை வாட்டினால் வலிக்கத்தான் செய்யும். தினசரி, சற்று முழங்கையை மடிப்பது, சற்று லேசாய் உடலைத் தாங்கிப் பார்ப்பது, இப்படி நிதானமாய்ப் பழகி வந்தால், மணிக்கட்டின் நரம்புகள், சதைகள் இளகிக்



கொடுக்கும். பாரம் தாங்கும் சக்தி ஏற்படும். பிறகு சற்று அதிகமாகப் பளுவைத் தாங்கி முன்னுக்கு வர முயற்சி செய்ய வேண்டும். இவ்வாறு சிறுகச் சிறுகப் பழகிவந்தால் கஷ்டமில்லாமல் வரும்.

சைக்கிள் விட்டுப் பழகினவர்களுக்கு 'பாலென்ஸ்' தெரியும். 'பாலென்ஸ்' ஏற்பட்டால்தான் இந்த மயூராசனம் சித்திக்கும். அதுவரை விழவும், அடிபடவும் செய்யும். புதிதாகச் சைக்கிள் கற்பவர்கள் எத்தனை தரம் விழுகிறார்கள்! எவ்வளவு காயங்கள் படுகின்றன! அதையெல்லாம் சட்டை செய்கின்றார்களா? எப்படியும் ஏறக் கற்றுக் கொள்ளவேண்டும். ஷோக்காகத் தெருவில் போகவேண்டும் என்ற எண்ணத்தினால் என்ன நேரிடினும் பழகியே தீருகிறார்க ளல்லவா? அதைப் போலத்தான். ஆனால் அவ்வளவு ஆபத்து கிடையாது. மருந்து போடும்படியான காயம் படாது. ஏதோ சற்று வலிக்கும். அவ்வளவுதான். விடா முயற்சியுடன் பழகி வந்தால் சில நாட்களில் சரியான நிலைக்கு வந்துவிடும்.

படத்திலுள்ளபடி செய்ய வந்தபின் இன்னமும் ஒருபடி முன்னேற வேண்டும். படத்தில் இரண்டு கால்களும் சேர்ந்தாற்போல் இருக்கிறதல்லவா? அவ்வாறே கால்களைக் கூடுமானவரை அகட்டி நிற்பது. இது மயில் தோகையை விரித்தாற்போல் இருக்கும். இது இரண்டாவது பயிற்சி. இதையும் மூன்றிலிருந்து ஆறு தடவைகள் செய்யலாம்.

இந்த நிலைமையிலிருந்து அதாவது கால்களை விரித்த நிலைமையிலிருந்து கால்களைக் கூடுமானவரை மேலே தூக்கவேண்டும். முழங்கால்களை மடங்கக் கூடாது. இது மயில் தோகையை மேலே விரித்து ஆடினாற்போல் இருக்கும். இந்தப் பயிற்சியையும் மூன்று முதல் ஆறு தடவை வரை செய்யலாம். இது மூன்றாவது பயிற்சி.

நான்காவது பயிற்சி இரண்டு கைகள் உடலைத் தாங்குவதற்குப் பதில் ஒரு கையால் தாங்குவது. சற்று முழங்கையை வயிற்றின் உள்பக்கம் தள்ளி வைத்து அதன்மேல் சரீரத்தை நிறுத்தவேண்டும். இது மயில் ஒரு காலால் நிற்பதுபோல் இருக்கும். பிறகு முன் தாங்கிய கையை எடுத்துவிட்டு இன்னொரு கைமேல் நிற்க வேண்டும். இப்படி யெல்லாம் செய்யும் போது 'பாலென்ஸ்' கிடைக்கும்வரை விழத்தான் வேண்டியிருக்கும். ஆனால் விடாமுயற்சியுடன் பழகினால் சில நாட்களில் வந்துவிடும். இதையும் மூன்றிலிருந்து ஆறு தடவைகள் செய்யலாம்.

ஒவ்வொன்றும் மூன்றிலிருந்து ஆறு தடவைகள் செய்வதற்கு நேரம் அதிகமாகும் என்று நினைப்பவர்கள் அவரவர்கள் இஷ்டம்போல் ஒரு தடவை, இரண்டு தடவை என்று குறைத்தும் செய்யலாம்.

இந்த ஆசனம் சிறு வயதினர்களுக்குச் சுலபமாய் வரும். வயது முதிர்ந்தவர்களுக்கு வருவது கஷ்டம். ஆனாலும் முழங்கைகள் மேல் சற்று உடலை ஊன்றினாற்போல் தினமும் பழகி வந்தாலே பெரும் பலன்கள் ஏற்படும்.

பெண்களுக்கும் அவ்வாறே. சிறுமிகளுக்குச் செய்யவரும். வயதானவர்களுக்கும், மார்பு பெருத்தவர்களுக்கும் சரியாய்ச் செய்ய வராது. தினமும் சிறு முயற்சிகள் செய்தாலே போதும். பலன் நிறைய இருக்கிறது.

இந்த ஆசனத்தைப் பெண்மணிகள் கர்ப்பம் என்று தெரிந்தபின் செய்யக் கூடாது. புதிதாய்ச் செய்பவர்களானாலும் சரி, பழகினவர்களானாலும் சரி, கருப்பக் தரித்தபிறகு செய்யவே கூடாது. மற்ற எல்லோரும் செய்யலாம். இந்த ஆசனம் செய்வதினால் உண்டாகும் பலன் அடுத்த கட்டுரையில் காணலாம். (தொடரும்)

நீங்கள் உங்கள் பற்களை

# இன்று மக்லீன் செய்தீர்களா?




வாயைச் சுத்திகரித்து
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது

உமிழ்நீர்
கெடுதலைத் தடுத்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
**வெண்மை**
தருகிறது

மக்லீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை யாரும் காப்பியடிக்க முடியாத பிரத்யேக முறையில் தயாரித்தது மிகவும் சுத்தமாயிருப்பதால் உலகமுழுவதும் பரவியுள்ளது. கறைகளைப் போக்கி வாயைச் சுத்தப்படுத்தி, உபயோகிப்பதற்கு மணமும் சுவையும் உள்ளதாக விளங்குகிறது

லக்ஷக்கணக்கான மக்கள் பிரதினமும் காலையில் மக்லீன்ஸ் மூலம் தம் பற்களைச் சுத்தம் பண்ணுவதைப் பழக்கப்படுத்திக் கொண்டுள்ளனர்.

இன்றே மக்லீன்ஸ் வாங்குங்கள்!



# மலரும் மங்கையும்

குஞ்சிதபாதம்

'கொக்கரக்கோ!' என்று கூவியது பூக்காவனத்தின் கிழச் சேவல், பொழுது புலர்வதை ஊராருக்கு அறிவித்துத் திருப்பள்ளியெழுச்சி பாடுவது போல. பூக்காவனம் சோம்பல் முறித்துக் கொண்டே எழுந்து பாயைச் சுருட்டி வைத்தான். பல் விளக்கி, முகம் கழுவி, வீட்டைப் பெருக்கி, வாசலில் கோலமிட்டாள். அன்று வெள்ளிக் கிழமை; காலை வியாபாரத்துக்குக் கிளம்பத் தயாரானான்.

சங்கீத வித்வானுக்கு ஸ்வரத்தையும், ஓவியனுக்கு வர்ணத்தையும், சிற்பிக்குக் கல்லையும், கவிஞனுக்கு வார்த்தையையும் பற்றி எவ்வளவு தெரியுமோ அவ்வளவு புஷ்பங்களைப் பற்றிப் பூக்காவனத்துக்குத் தெரியும். பூ விற்பதிலும்தான் எவ்வளவு வியாபார ரகசியம் உண்டு! காலையிலே விற்கிற கதம்பத்தில் மஞ்சள் அரளி, செவ்வரளி, செவந்தி, முல்லை முதலிய மலிவு விலைப் புஷ்பங்களைத் தொடுத்து விற்கலாம். குறைந்த விலையில் அதிக அளவு கேட்பார்கள். காலையில் சுவாமி பூஜைக்கும் இந்த மாதிரி மற்றக் காரியங்களுக்கும் தானே வாங்குவார்கள்? அழகும், வாசனையும் உள்ள மலர்களை மாலைக் கதம்பத்தில் தொடுக்க வேண்டும். முழு ரோஜாப் புஷ்பங்களுடன் தாழை, மல்லிகை, கிலசம்பங்கி, மருதோன்றி மலர்களையும் கதம்பமாகத் தொடுத்து அதிக விலைக்கு விற்று விடுவான் அவன் மாலையில். இந்தக் காலத்தில்தான் மறுமலர்ச்சி எல்லாத் துறைகளிலும் தோன்றியிருக்கிறதே, பூவியாபாரம் மட்டும் விதி விலக்கா என்ன? நகரத்திலுள்ள பங்களாக்களின் தோட்டக்காரர்களிடம் காசு கொடுத்துத் துலுக்க செவந்தி, ஜப்பான் ரோஜா, வயோலா முதலிய அலங்காரச் செடிகளின் பூக்களையும் நிறைய வாங்கி வந்து அவைகளையும் கதம்பத்திலே சேர்த்து விடுவான். பூவோடு சேர்ந்த நாறுக்கும் மணம் வரும்போது, வாசனையில்லாத இந்தப் பூக்களின் வாசனையில்லாத் தன்மையையா வாங்குகிறவர்கள் கண்டு பிடித்து விடுவார்கள்? பூக்காவனம் தொழில் தெரிந்தவன்.

மெல்லிய மூங்கில் சிம்புகளால் முடையப்பட்ட தட்டின் மேலே ஆடாதொடை இலைகளைப் பரப்பினான் அவன். கூடையிலிருந்த கதம்பம், வெட்டி வேர், மருக்கொழுந்து, முல்லைச்சரம், பந்தாகச் சுருட்டியிருந்த வாழை நார் இவைகளை வரிசையாக வைத்தான் தட்டில். கொடியில் கிடந்த ஒரு பழைய கந்தல் துணியைத் தண்ணீரில் நனைத்துப் பிழிந்து மேலே மூடினான். தலை மயிரைக் கோதிக் கூந்தலைக் கொண்டையாக அள்ளிச் செருகினான். அவிழ்ந்து பிரியும் போலிருந்த கொண்டையை ஊசிகளைக் கொண்டு, சுலபமாக நெகிழ்ந்து நழுவாமல் கெட்டியாகச் செய்தான். ஊதா நிறக் குங்குமத்தை நீரில் குழைத்துக் காலணா அகலப் பொட்டு இட்டுக் கொண்டான் நெற்றியில்.

பூக்காவனத்துக்குப் பூப்போன்ற மென்மையான உடலுள்ள ஒரு குழந்தை இருந்தது. அது தூளியில் தூங்கிக் கொண்டிருந்தது. அவனுடைய கணவன் முத்தையன் இன்னும் எழுந்திருக்கவில்லை. அந்த வீட்டில் 'சின்னாயி' என்று எல்லோரும் கூப்பிடும் ஒரு கிழவி இருந்தாள். அவள் யாருடைய சின்னாயியோ யாருக்கும் தெரியாது. தெருவிலே இருந்த அத்தனை ஜனங்களும் அவளைச் சின்னாயி என்றுதான் கூப்பிட்டார்கள். பூவிற்கப் புறப்பட்டுக் கொண்டிருந்த பூக்காவனம், "சின்னாயி! எழுந்திரு, எழுந்திரு! விடிஞ்சு சாமமேரம் ஆவுது, இன்னும் என்ன தூக்கம் ... அவங்களையும் எழுப்பு" என்று சொன்னான்.

முத்தையன், "நான் முழிச்சிக்கிட்டுத் தான் இருக்கிறேன். கிளம்பிட்டயா பூவிக்க?" என்றான்.

"நான் போறேன், நீங்க சாக்கிரதையா இருந்துக்கிங்க. நாடாருகிட்டே நேத்து மாதிரி வம்பு, கிம்பு வளக்காதிங்க" என்றான் அவன்.

"சரி, சரி, நீ போ!" என்றான் அவன்.

பூக்காவனம் தளுக்கிக் குலுக்கி மினுக்கி ஒய்யார நடையுடன் பூவிற்கச் சென்றான்.

## 2

சூரியோதயம் ஆகி விட்டது. மூங்கில் இலை நுனியில் தூங்கும் பனி நீர்த் துளிகள் வெய்யில்பட்டு வைர மணிகள் போல ஜ்வலித்தன. திரிசங்கு நாடார் பெரிய வாய்க்காலில் தாளையும், கத்திகளையும் 'நேற்றைப் பாவம் நேற்றோடே' என்று எண்ணுவது போல, அழுக்கைப் போக்கித் தேய்த்துத் துப்புரத் துலங்கச் செய்து கொண்டிருந்தார். பசம்புல் தளதள வென்று

வளர்ந்திருந்த வாய்க்காலின் கரையிலிருந்த சிறு கீற்றுக் கொட்டகை அவருடைய வியாபார ஸ்தலம். கொட்டகையின் நடுவிலே கிடந்த ஒரு வட்டமான புளியங்கட்டைதான் பலிபீடம். கொட்டகையின் எதிரிலிருந்த உதியமரத்தின் அடியிலே முறுக்கிய வைக்கோல் கயிற்றினால் இரண்டு ஆடுகள் கட்டப்பட்டிருந்தன. மரண பீதியினால் அவை கத்துவதற்குக் கூடச் சக்தியில்லாமல் ஒன்றையொன்று எக்கிப் பார்த்துக் கொண்டிருந்தன. பக்கத்திலேயிருந்த மூங்கில் கொத்தின் மேலிருந்த செம்போத்து அவைகளைப் பரிகசித்து கனைத்துக் கத்திக் கொண்டிருந்தது. ஆடுகளின் முன்னே கிடந்த பூவரசந் தழைகளை அவை முகர்ந்து பார்க்கவும் இல்லை. சற்று நேரத்தில் கொல்லப் போகும் ஆடுகளுக்குத் தழை போடுவதும் கருணை போலும்!

திரிசங்கு நாடாருக்குக் கொஞ்சம் நில புலன்களும், தினசரி வியாபாரத்தில் நல்ல வரும்படியும் இருந்தன. கள்ளுக்கடை இருந்த காலத்தில் குதிரை வண்டி, ஒரு லாரி, ஆள் பரிவாரம் எல்லாம் இருந்தன. கள்ளுக்கடை போனதும் அவர் நிலைமை கொடித்துப் போய்விடவில்லை. வேறு வியாபாரம் ஏதாவது செய்யலாம் என்று யோசித்துக் கொண்டேயிருந்தார். மூத்தையன் அவருடைய மந்திரியாக இருந்தான் அப்போது. 'டூரிங்' சினிமா 'செட்' ஒன்று விலைக்குக் கிடைக்கும் என்று மூத்தையன் காதில் செய்தி விழுந்திருந்தது. நாடாரைத் தூண்டி அதை வாங்கும்படி செய்தான். நாடாரின் கையிலே அவ்வளவு பணம் இல்லை. நிலபுலன்களை அடமானம் வைத்து அதிக வட்டிக்குக் கடன் வாங்க நேர்ந்தது. கிராமாந்தரங்களில் சினிமா சரியாக நடக்கவில்லை. மழை நாட்களில் வசூல் இல்லை. நிர்வாகமும் தாறுமாறாக இருந்தது. கண்டவர்கள் பிடுங்கி அடித்துத் தின்று விட்டுப் போனார்கள். மூத்தையனையே நம்பிச் சினிமாவை ஒப்படைத்திருந்த நாடார் விழித்துக் கொள்ளும்போது வெள்ளம் தலைக்கு மேலே ஓடிக்



கொண்டிருந்தது. வெள்ளம் சாண் ஓடினாலென்ன, முழம் ஓடினாலென்ன என்று நாடார் 'இன்ஸால்வென்ஸி' கொடுக்கும்படியாயிற்று. தம்முடைய நிலைமைக்கு ரொம்பக் கீழான தொழிலில் இறங்கினார் நாடார். கசாப்புத் தொழிலில் காலம் கழிக்க வேண்டியதாயிற்று. கணக்கு வழக்குப் பார்த்ததில் மூத்தையன் மூவாயிரம் ரூபாய் அவருக்குத் தர வேண்டியிருந்தது. பாவம், அவனும் கையிலே மடியிலே பணத்தைச் சுருட்டி வைத்துக் கொள்ளவில்லை. பொறுப்பில்லாதவனாக, ஊதாரித்தனமாகச் செலவு செய்து விட்டான் அவன். அதற்கு ஏதோ சீட்டு நோட்டுக்களும் இருந்தன. கோர்ட்டில் தாவா செய்தால் செலவு தொகை வீண்தான். எப்படி மூத்தையனிடமிருந்து வசூலிப்பது? நயமாகக் கேட்டுப் பார்த்தார் நாடார், மிரட்டிக் கேட்டார், "தர்றேங்க, அதுக்கென்ன ஆவட்டுங்க" என்று மூத்தையன் சொல்லிக் கொண்டேயிருந்தான். ஒருவருக்கொருவர் நாளுக்கு நாள் பேச்சு மேலே வளர்ந்து வெட்டுப்பழி, குத்துப் பழியாகப் பகை மூண்டு விட்டது. முதலில் சங்கோசத்துடன் நாடாரைக் கண்டால் ஒதுங்கிப் போய்க் கொண்டிருந்த மூத்தையன் கடைசியில் தைரியமாக நாடாருக்கு முன் ராஜநடை போட ஆரம்பித்தான்.

நாடாருடைய கசாப்புக் கடைக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு சவுக்குத் தோப்பும், வாழைத் தோட்டமும் இருந்தன. வாழைத் தோட்டத்தின் வேலிக் கால்களாக மருதோன்றிச் செடிகளும், அரளிச் செடிகளும் பூத்துக் குலுங்கி அழகாக இருந்தன. தோட்டத்தின் ஒரு பகுதியில் புஷ்பச் செடிகளும் இருந்தன. தோப்பும், தோட்டமும் சின்னாயியின் பேரிலேயே இருந்தன. அவள் பேரில்தான் பட்டா; சர்க்கார் ஜிஸ்திரதில் அவள் பெயரே இருந்தது. அவைகளிலிருந்துவரும் வரும்படியும், பூ வியாபாரத்திலிருந்து கிடைப்பதும் கொண்டு குடும்பம் நடைபெற்றது. சின்னாயியிக்குப் பிறகுதான் மூத்தையனுக்கு இவை கிடைக்கும். நாடார் மூத்

தையனை நிர்ப்பந்தித்து, இந்தப் பூமியைத் தம் வசப்படுத்திக் கொள்ள எண்ணினார். கடனுக்குத் துரோகம் செய்யாமல் சின்னாயியிடம் சொல்லித் தம் பெயருக்கு எழுதி வைக்கும்படி முத்தையனிடம் சொன்னார் நாடார். இது விஷயமாகப் பெரிய சண்டை அவர்களிடையே விளைந்தது.

நரிசங்கு நாடார் கரையேறிக் கொட்டகைக்குள் சென்று அங்கிருந்த ஒரு விசிப் பலகையின் மேல் உட்கார்ந்து 'அந்தநாளும் வந்திடாதோ!' என்று மனம் வருந்தப் பச்சாத்தாபப் பட்டுக் கொண்டிருந்தார்.

முத்தையன் வாழைத் தோட்டத்தின் வேலியைத் தாண்டுவதற்கான இரட்டையேணி யொன்றைத் தோளில் சுமந்து போய்க் கொண்டிருந்தான். கிழிந்த சட்டையொன்று போட்டுக் கொண்டிருந்தான் அவன். நாடார் தாமே நேரில் ஜவுளிக் கடையில் தேர்ந்தெடுத்துத் தைத்துக் கொடுத்த சட்டைதான் அது. அதைப் பார்த்ததும் நாடாருக்கு இருந்த ஆத்திரம் பன்மடங்கு பெருகியது. 'இந்த மனிதன் எப்படியெல்லாம் ஏமாற்றி மோசம் செய்து விட்டான்?'. என்று பெருமூச்சு விட்டார். "இங்கே வா முத்தையா?" என்று கூப்பிட்டார் அவர். முத்தையன் வந்தான்.

"வருசம் இரண்டாச்சு, இதோ ஆகட்டும், அதோ ஆகட்டும் என்கிறே. முடிவாச் சொல்லு! இன்னைக்கு உண்டு, இல்லே இரண்டுலே ஒன்று தீர்த்துடணும்" என்றார்.

"பணமாவது, காசாவது, எல்லாம் செலவளிஞ்சு போச்சய்யா அப்பவே!" என்றான் முத்தையன்.

"இவ்வளவுதான் தெரியுமா, இன்னும் ஏதாவது தெரியுமா?"

"நானும் மரியாதை மட்டு பாத்துக்கிட்டிருந்தேன். என் கிட்டே அல்லவா உமக்கு வழக்கு? பொம்பளே கிட்டே என்னய்யா பேச்சு உமக்கு? நேத்து பூங்காவனத்துக் கிட்டே எதுக்காக ஐயா என்னைப் பத்திக் கன்னாப் பின்னான்னு பேசினே! கிடையாதய்யா பணம்! உன்னாலே ஆனதைப் பாத்துக்க."

"கெடக்கு வேணும்னு நானும் சும்மா விட்டிருந்தேன். பின்னால் நான் என்ன பண்ணுவேன் தெரியுமா?"

முத்தையன் பேசாமல் கிளம்பினான். நாடார் ஏணியைப் பிடித்து இழுத்தார். வாய்ச் சண்டை கைச்சண்டையாக முற்றி விடும் போலிருந்தது. ஏணியைக் கீழே போட்டான் முத்தையன்.

"சவுக்கை மரத்தை யெல்லாம் வெட்டி வித்துடறேன், என்னடா பண்ணுவாய்?" என்றார் நாடார்.

"கையிலே காப்புப் போட்டுக்கிட்டுப் போய்க் கம்பி எண்ணணும் தெரியுமில்லே."

"சரி, பார்ப்பமே! போ, போ!"

முத்தையன் ஏணியைத் தூக்கிக் கொண்டு விடு விடு என்று நடந்தான்.

## 3

சங்கேத சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கும் காலப் பிரமாணத்துக்குக் கட்டுப்படாமல் உலையில் சோறு கொதித்துக் கொண்டிருந்தது. புகை படிந்திருந்த கூரையின் ஒரு மூங்கிலின் அடியில் வாலைக் குழைத்து தெளித்துச் சோதிடம் சொல்லிக் கொண்டிருந்த பல்லி நிலை தவறி 'பொத்' தென்று கீழே விழுந்தது. தரையில் விழவில்லை; சின்னாயியின் தலையில் விழுந்தது! சோறு பொங்கிக் கொண்டிருந்த சின்னாயி பதறிப்போய் எழுந்திருந்தாள். தலையில் பல்லி விழுந்தால் மரணம் என்று பஞ்சாங்கத்தில் போட்டிருக்கிறது என்று அவளுக்குத் தெரியும். யாரோ எப்போதோ சொல்லியது நினைவு வந்து அவள் மனம் கலங்கியது.



அன்று பிற்பகல் முத்தையன் வீட்டுக்குள் நுழைந்ததும் சின்னுவி, "மகனே, என் தலையிலே பல்லி விழுந்திடிச்சு. கால பலன் நல்லா இல்லே. இருக்கிற செல புலத்தை எனக்குப் பிற்காலம் நீயே அடைஞ்சுக்கிறதுன்னு எழுதிக் கொடுத்து ரெஜிஸ்தர் பண்ணிடணும். காலைக்கு நிமை சென்று நல்லது பொல்லாதது எதினுச்சி யும் சேர்ந்தா என்ன பண்ணறது?" என்றாள். அறந்த கைக்குச் சுண்ணாம்பு தடவாத சின்னுவியின் மனம் திடிரென்று இப்படி அவனிடம் பரிவு காட்டிப் பேசுவது அவனுக்கே நம்ப முடியாத ஆச்சரியம் விளைவித்தது.

"என்ன சின்னுவி, இப்போ என்ன திடீரென்று நினைச்சுக்கிட்டே, எங்கே ஓடிப் போவுது, உன் பேரிலேயேதான் இருக்கட்டுமே" என்றான் முத்தையன்.

"இல்லேடா தம்பி! பல்லி விளுந்தா தலையிலே, மனசு சங்கடப்படுது. எல்லாத்துக்கும் இருக்கட்டுமே; எழுதி ரெஜிஸ்தர் பண்ணிடு. ஆனா ஒண்ணு, என் உசிரு இருக்கிற மட்டும் என்னோட பேரிலேதான் இருக்கணும், எனக்குப் பிறகு நீ அடையறதுன்னு வக்கீலு கிட்டாரப் போய் எழுதிக்கிட்டு வா" என்றாள்.

'கிழவி சொல்வது சரி' என்று தோன்றியது முத்தையனுக்கு. ஒரு வக்கீலிடம் அழைத்துப் போய் 'செட்டில் மெண்டு' பத்திரம் எழுதி, ரிஜிஸ்டர் செய்து வைத்தான். சப் ரிஜிஸ்டிரார் ஆபீஸிலிருந்து வந்ததுமே சாட்சிகள் நாடாரிடம் இந்தத் தகவலைத் தெரிவித்து விட்டனர். கிராமாந்திர 'அரசியலே' இப்படித்தான்! நாடாருக்கும் நம்பிக்கை வந்து விட்டது. முத்தையனிடமிருந்து இனிமேல் வசூல் செய்யவே முடியாது என்ற நினைத்த தொகை வந்து விடும் என்று தோன்றியது. எப்படியோ தாவா செய்வதற்கு வேண்டிய தொகையைச் சேகரித்து, முத்தையனிடமிருந்து வரவேண்டிய பணத்துக்குக் கோர்ட்டு மூலம் டிகிரி பெற்று விட்டார். முத்தையன் எதிர்க்கட்சியாடவில்லை. கிழவி யிருக்கும் வரையில் ஸ்தாவர சொத்து எதையும் நாடார் எதுவும் செய்ய முடியாது என்று அவனுக்குத் தெரியும். வாரண்டில் பிடித்து ஜயிலில் வேண்டுமானால் வைக்கலாம். நாடார் செலவில் சிவில் ஜயிலில் போய் மூன்று மாதம் சாப்பிட்டுவிட்டு வருவதற்கும் அவன் தயாராக இருந்தான்.

கிராமத்திலிருந்து நகரத்துக்குக் குறுக்கு வழியாகப் போனால் இரண்டே மைல். அந்த வழி நாடாரின் கடையைக் கடந்தே சென்றது. நாடாரின் கண்களும், மீசையும் பூங்காவனத்துக்குப் பயம் விளைவிப்பதாயிருந்த போதிலும், ஜன நடமாட்டம் இருந்த நேரத்திலேயே அவன் போவதும் வருவதுமாயிருந்ததனால் எந்த விதமான ஆபத்தும் ஏற்படும் என்று என்று அவள் நினைக்கவில்லை.

ஒருநாள் மாலை அவள் ஒரு கூடை நிறையச் சாமான் வாங்கிக் கொண்டு வந்து கொண்டிருந்தாள். அப்பொழுது முத்தையன் மேல் நாடார் கோர்ட்டு 'டிகிரி' வாங்கிவிட்டார். நாடார் கண்களிலே படாமல் எப்படியாவது போய்விட வேண்டும் என்று நினைத்துக் கொண்டே வேகமாக நடந்து கொண்டிருந்தாள். நாடார் கடையை அவள் சமீபிக்கும் வேளையும், எதிர்ப்புறத்திலிருந்து நாடார் வரும் வேளையும் ஒன்றாயிருந்தது. நாடாரின் பின்னால் ஒரு ஆள் இரண்டு ஆடுகளை ஒன்றாக இணைத்து ஒரு மிளாரினால் அடித்து ஓட்டி வந்தான். பூங்காவனத்தை நேருக்கு நேரே சந்தித்ததும் நாடார், "என்ன விசேஷம் பூங்காவனம்? ஜாமானெல்லாம் பலமாயிருக்கிறதே!" என்று குசலப் பிரச்னம் செய்தார்.

நாடாரிடம் அவள் பேச்சுக் கொடுக்க விரும்பவில்லை—மேலே நடந்தாள்.



"தெரியுமில்லே? டிகிரி வாங்கிப்பிட்டேன். கிழவி செட்டில்மெண்டு எழுதி வெச்சிருக்காளா மில்லே உன் புருசன் பேரிலே, வாஸ்தவமா?" என்றார் காடார்.

"எனக்கு ஒன்றும் தெரியாது, வழியை விடுங்க" என்றாள் பூக்காவனம்.

"சும்மா சொல்லு, பின்னே! என்னமோ தடுமாறுகிறயே, வாழைப் பழம் மாதிரி விழுங்கிட மாட்டேன் உன்னை."

"என்னிடமா பணம் கொடுத்திருக்க? யாருக்கிட்ட கொடுத்திருக்கனோ, அவங்களையே கேட்டுக்கிங்க."

"அவனைப் பார்த்தா கொடுத்தேன்? கிளி மாதிரி இருக்கயே, உன் மூஞ்சியைப் பார்த்தில்லே கொடுத்தேன்."

"உம், நாக்கை அடக்கிப் பேசுங்க. என்ன நெனைச்சுக்கிட்டிருக்கிங்க? புத்தி கித்தி கிராணத்திலே இருக்கோ?"

"ஏன் இப்படிப் பதறுகிறயோ? காடாரு லேசுப்பட்ட மனுசன் இல்லே. உன் புருசன் கிட்டே சொல்லு. சும்மா இலேசிலே விட்டுட மாட்டார்; ஆறுமாசம் கம்பி எண்ண வெச்சுடுவாருன்னு சொல்லு. கிழவி கிட்டே கேட்டு வாழைக் கொல்லையையும், சவுக்குத் தோட்டையையும் என் பேருக்கு எழுதிப்புடச் சொல்லு. தெரியுதா, போ! நல்லா ரோசனை பண்ணிப்பாரு" என்றார்.

பூக்காவனம் வீட்டுக்கு ஓட்டம் ஓட்டமாக ஓடினாள். கிழவியிடமும், புருஷனிடமும் சொல்லி அழுதாள். அவள் உடம்பு வெட வெட என்று நடுங்கியது. முத்தையன் அவளுக்குத் தேறுதல் சொன்னான். கிழவி அவளுக்குத் திருஷ்டி கழித்துப் போட்டாள். 'ஊரிலே யாரிடமும் ஒன்றும் சொல்லாதே' என்று எச்சரிக்கை செய்தான் முத்தையன். பூக்காவனமும் அன்று முதல் பூ விற்கப் போவதில்லை. வீட்டை விட்டே அவள் கிளம்பவில்லை. காடாரின் பயங்கரமான உருவம் அவள் எதிரிலே எப்பொழுதும் தோன்றிக் கிலி பிடிக்கச் செய்தது. காடாரோடு கூட ஒரு ஆள் அப்பொழுது இல்லாவிட்டால், அவர் என்ன, என்ன பேசியிருப்பாரோ என்று கற்பனை செய்து கலவரமடைந்திருந்தாள் அவள்.

## 4

முத்தையன் வயிற்று வலி என்று சொல்லிக் கொண்டிருந்தான். இது தப்பறியும் கதை இல்லாததனால் நான் முதலிலேயே உண்மையைச் சொல்லிவிடுகிறேன். முத்

## பிரம்மசாரி



'பிரம்மசாரி' என்ற நாடகத்தை எழுதியதோடல்லாமல், பிரம்மசாரியாக, அதாவது கதாநாயகனாகவே நடித்துப் பொது மக்களை மகிழ்வித்தாராம் நாரதர் ஸ்ரீனிவாஸராவ் சென்ற மாதம் நாடகக் கழகத்தில்.

★

அந்த நாடகத்தில் ஸ்ரீமதி டி. எஸ். ராஜலக்ஷ்மியும் மற்றும் சில அமெச்சூர் நடிகைகளும் வெற்றிகரமாக நடித்தனர் என்று அறிகிறோம்.

குரங்கைத் தூக்கிக்கொண்டு பல ஸீன்களில் பிரம்மசாரி தோன்றிய போதெல்லாம், சபையோர் கரகோஷம் செய்து ஆரவாரித்தனராம்.



தையன் வலி என்று பொய் சொன்னான். அடிக்கடி சுருண்டு படுத்துக் கொண்டான். நாட்டு வைத்தியரிடம் மருந்து வாங்கி யாருக்கும் தெரியாமல் வெளியிலே கொட்டி விட்டான். பிறகு ஆஸ்பத்திரிக்குப் போய் அடிக்கடி மருந்து வாங்கி வந்து கொட்டினான். சாப்பிடவில்லை. ஆனால் ஆஸ்பத்திரிக் காகிதங்களை யெல்லாம் ஜாக்கிரதையாக வைத்துக் கொண்டான். நகரத்தில் ஒரு குடுகுடுப்பாண்டி பழைய துணிகளை விற்றுக் கொண்டிருப்பதை ஒரு நாள் பார்த்தான். அவனிடமிருந்து ஒரு கோட்டு வாங்கிக் கொண்டான். கடையில் ஒரு குல்லாவும் வாங்கினான். அந்தக் குல்லாவின் உள்ளேயிருந்த பெயரைக் கிழித்தெறிந்து சேற்றிலே அமுக்கி, குட்டையின் அழுக்கு நீரில் கழுவி, வீட்டிலே பரணையின்மேல் காய வைத்தான். இதெல்லாம் மூத்தையனுக்கும், எழுதுகிற எனக்கும், படிக்கிற நேயர்களுக்கும் தெரியுமே தவிர வேறு யாருக்கும் தெரியாது. புதிய கத்தி ஒன்றையும் வாங்கினான். எல்லாவற்றையும் மறைத்து ஒளித்து வைத்துக் கொண்டிருந்தான்.

ஆனால் பூங்காவனமோ தன் கணவனுக்கு இப்படி உடம்புக்குக் கேடு வந்துவிட்டதே என்று வருந்தினாள். சின்னயி ஒரு ரூபாய் பணத்தை மஞ்சள் துணியில் முடிந்து அவன் கையில் கட்டினாள். அவன் சிரித்துக் கொண்டே அதை அவிழ்த்து விட்டான். ஆனாலும் 'ஐயோ, அப்பா' என்று பலமாக முனகினான்.

ஒரு நாள் காலையில் நாடார் கொலை செய்யப்பட்டு விட்டார் என்ற வதந்தி ஊரெங்கும் பரவியது. புதிய கத்தியும், பழைய குல்லாவும், கிழிந்த கோட்டும் உளவுப் பொருள்களாகக் கிடைத்தன. போலீஸார் வந்தனர். மணியக்காரருடன் கலந்து யோசித்து யாதாஸ்து எழுதினார்கள். ஆஸ்பத்திரியில் பிரேத விசாரணையில் கத்தியால் குத்தப்பட்டு மரணம் என்று காரணம் கண்டுபிடித்துச் சொன்னார்கள். கொலை செய்தது மூத்தையன் என்று யாருக்கு, எப்படித் தெரியும்?

இரண்டு நாட்கள் ஆயின. போலீஸாருக்கு மொட்டைக் கடிதங்கள் வந்தன. வயிற்று வலியால் துடித்துக் கொண்டிருந்த மூத்தையனையும் விலங்கு போட்டு இழுத்துச் சென்று விட்டார்கள். மூத்தையனும் எவ்வளவோ கத்திக் கதறிப் பார்த்தான். பலன் இல்லை. சின்னயியும், பூங்காவனமும் அலறி மோதிக் கொண்டிருந்தார்கள். மூத்தையனைப் பற்றிய செய்தி ஒன்றும்



"உங்களுடைய நாய் என்னைக் கடிப்பதற்கு என் மேல் பாய்ந்தது. கொஞ்சம் குறி தவறிற்று, அவ்வளவுதான் தப்பித்தேன்."

"சே! சே! அது என் நாயாக இருக்கவே இருக்காது."

"உங்கள் நாய்தான். ஏன் இல்லை என்கிறீர்கள்?"

"என் நாய் பாய்ந்தால் கடித்து விட்டுத்தான் திரும்பும்; குறி தவறின வழக்கம் அதன் சரித்திரத்திலேயே கிடையாதே!"

தெரியவில்லை. பத்திரிகைகளில் கூட, காகிதப் பஞ்ச காலத்தில், ஒரு நாள் ஒரு பத்தி மூன்று அங்குலம் செய்தி வந்தது. நாடாரைக் கொலை செய்தது தான்தான் என்று மூத்தையனும்* சப்மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஒப்புக்கொண்டு விட்டான். செஷன்ஸ் விசாரணைக்கு அவன் அனுப்பப்பட்டான்.

பூங்காவனத்தின் உல்லாசமெல்லாம் மாறிச் சோகமாகியது. அவளது மலர் மேனி அனலில்பட்டது போல வாடித் துவண்டது. அவளுடைய கண்ணீர் ஆறாகப் பெருகியது. இதயத்தின் ஜன்னல்கள் எல்லாம் மூடிக் கொண்டு ரத்த ஓட்டமே நின்று விடும் போலிருந்தது ஒரு கணம். ஒரு கணம் உடலிலுள்ள ரத்தமெல்லாம் ஒரே காலத்தில் இதயத்திலே பாய்ந்து இதயம் உடைந்து விடும்போலிருந்தது. சின்னயியும், அவளும் விவரம் புரியாது அழுது கொண்டிருந்தனர்.

இன்று செஷன்ஸ் விசாரணை. காலையிலேயே நியாய ஸ்தலத்தின் காம்பௌண்டுக்குள்ளிருந்த வாதாம் மரத்தின் அடியிலே பூங்காவனமும் சின்னயியும் குழந்தையுடன் வந்து உட்கார்ந்து விட்டனர். அழுத குழந்தைக்குப் பால் கொடுக்கவும் புத்தி செல்லவில்லை பூங்காவனத்துக்கு. கிழவி மடியிலே குழந்தையைப் போட்டுக்கொண்டு

"லோ, லோ, லோ" என்று உளறித் தாலாட்டிக் கொண்டிருந்தாள். நேரம் ஆயிற்று. பெருக்குகிறவர்கள் வந்தார்கள். சத்தம் செய்தார்கள். ஜன்னல் கதவுகள் திறந்து கொண்டன. குமாஸ்தாக்கள் வந்துகொண்டிருந்தனர். கட்சிக்காரர்கள் பலர் வந்து கொண்டிருந்தார்கள். நடந்தும், வண்டியிலும், மோட்டாரிலும் வக்கீல்கள் வந்து கொண்டிருந்தார்கள். ஜட்ஜ் வந்திறங்கினார் மோட்டாரில். "ஆண்டவனே, அவர் மனத்தில் ஈவு இரக்கம் உண்டாக்கு" என்று பிரார்த்தித்துக் கொண்டாள் பூங்காவனம். மெல்ல மெல்ல ஜனசஞ்சாரமுள்ள இடமாயிற்று அந்த இடம்.

பயத்தம் கஞ்சி விற்கிறவன் ஒருவன், பளபள வென்று மின்னும் பித்தளைப் பாத்திரத்தையும் அடுப்பையும் கோர்ட்டின் வெளியே, புளிய மரத்தின் அடியிலே கொண்டு வந்து வைப்பதை, உடைந்த மரக் கதவின் சட்டங்களின் இடைவழியே பார்த்தாள் பூங்காவனம். அவனிடம் ஓரணாக் காசு கொடுத்து எத்தனையோ தடவை சூடாகக் கஞ்சி வாங்கிச் சாப்பிட்டுக் களைப்பாறியிருக்கிறாள். இன்று ஏனோ எல்லாம் வெறுப்பாகக் காட்சியளித்தன.

மளிகைக் கடைக்கார ஐயாவையே எதிர் பார்த்துக் கொண்டிருந்தாள் அவள். அவர் தான் அவளுக்காக வக்கீல் அமர்த்திக் கேஸ் நடத்த ஏற்பாடுகள் செய்தார். அவள் அவரிடம் ஒரு சங்கிலியும், காப்புக்களும் விற்றிருந்தாள் செலவுக்கு. மளிகைக் கடைக்காரர் தப்புக் கணக்குச் சொல்லிப் பணம் எடுத்துக் கொண்டு விடுவார்தான். அதையெல்லாம் பார்த்தால் சரிப்படுமா? பெண்பிள்ளையை ஏமாற்றினால் தெய்வம் பார்த்துக் கொள்ளும்! மளிகைக் கடை ஐயா, வக்கீலுடன் போய்க் கொண்டிருந்தார். அவள் கணவனை இரு போலீஸ்காரர்கள் துப்பாக்கி சகிதம் விலங்கிட்டு அழைத்து வருவதைப் பார்த்தாள். கண்களை இறுக மூடிக்கொண்டாள்.

## 5

மூத்தையன் ஏழு வருஷத் தண்டனைக்குப் பின் விடுதலை யடைந்து ஊருக்கு வந்ததும் பல நாட்கள் வீட்டை விட்டு வெளிக் கிளம்பவில்லை. பூங்காவனம் செலவழிந்த பணத்தை யெல்லாம் சேகரிப்பதற்காகச் சிக்கனம் பிடித்தாள். பூ வியாபாரத்தில் தீவிரமாக ஈடுபட்டாள். ஒரு நாள் விதவிதமான வண்ண மலர்களைக் கொட்டிக் குவித்து ஒவ்வொன்றாக எடுத்து வாழை நாரில் கதம்பமாகத் தொடுத்துக் கொண்டிருந்தாள். அவளுடைய கனிந்த மலர்க் கரங்களின் விரல்கள் நார்களுடனும் மலர்களுடனும் லாகவமாக நடனமாடின. சின்னாயி ஏதோ அலுவலாகப் போயிருந்தாள்.

மூத்தையன் "பூங்காவனம், ஒரு விசயமில்லே உன் கிட்டேச் சொல்லணும்னு தோணுது" என்றான்.

அவள், தலைநிமிராமலே, "என்னது?" என்று கேட்டாள்.

"நாடானைக் கொலை பண்ணினது யாரு தெரியுமா?"

"எதுக்காக அந்த விசயம் இப்போ சொல்றீங்க என்பது தெரியும்."

"யாரு?"

"நீங்க தான்!"

"எப்படித் தெரியும்?"

"குல்லாவும், கோட்டும் நீங்க எதுக்காக வாங்கினீங்க என்று அப்பவே தெரியல்லே. நாடாரு செத்தப்புறம்லே தெரிஞ்சது. வேறே யாரோ கொலை பண்ணினாங்கன்னு எல்லாரும் நினைச்சுக்கட்டும்னு கொண்டு போட்டீங்க. இல்லையா?"

"பூங்காவனம்! நல்லாக் கண்டு பிடிச்சிட்டியே! எதுக்காக கொன்னேன் தெரியுதில்லே! அன்னைக்கு உன்னிடத்திலே தாறுமாறாகப் பேசினாரு பாரு அவரு, உன்னுடைய பூப்போன்ற மனசு என்ன பாடு பட்டிருக்கும். நெருப்பிலே போட்ட பூ மாதிரியில்லே வாடிப் போயிருக்கும்?"

"அதுக்காகவும் கொல்லல்லே நீங்க. யாரு கிட்டே கதை அளக்கிறீங்க. நாடாரு சின்னாயியைக் கொல்றதுக்காகத் திட்டம் போட்டிருக்காருன்னு எங்கிட்டவே ஒரு நாளு சொன்னீங்களே. சின்னாயி செத்துப் போனா, தோட்டம், தோப்பு எல்லாம் உங்க பேரிலே வந்துவிடும். அதுங்களே ஏலம் போட்டுப் பணம் வாங்கிடலாம்னு நாடாரு நெனைச்சாரு. ஒரு பாவமும் தெரியாத சின்னாயி செத்துப் போவானேன்? ஒரு உசிரைக் காப்பாத்தறதுக்கு இன்னொரு உசிரைக் கொன்னீங்க. அதுக்குத் தக்க தண்டனையும் அடைஞ்சீங்க. காப்பாத்தறதுக்குத்தான் என்றாலும் 'கொல்வது' என்பது பெரிய பாவம் இல்லையா? நான் நெனைக்கிறது சரிதானா?"

"பூங்காவனம், அப்படியேதான்!" என்று சொல்லிக் கொண்டே எழுந்து வந்து அம்மங்கையின் மலர்க் கன்னத்திலே ...

"சின்னாயி வர்றாங்க, சத்தம் கேக்குது போங்க" என்றாள் அவள். அவன் ஓடிப் போய்க் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்து புராணம் படிக்கத் தொடங்கினான்.




ASPRO

# வட்ட மேஜை

## அதிசயம், ஆனல் உண்மை!

இந்த நாட்டிலே தற்சமயம் 'ஸர்ப்ளஸ்' (அதிகப்படியானது) என்னவென்றால் நோட்டுச் செலாவணியும், அதிகாரிகள் 'கூட்டமும் தான். அதிகாரிகள் என்றால் என்ஜினீயர்கள், டாக்டர்கள், மேஸ்திரிகள், ஓவர்ஸியர்கள், இப்படி ஏதாவது என்கிறீர்களா! அதுதான் இல்லை. ஜமீனுக்கு ஒரு தாசில்தார், கிணற்றுக்கு ஒரு தாசில்தார், ஜன சங்கியை எடுப்பதற்கு ஒரு தாசில்தார்—இப்படி ஒரு கூட்டம். இவர்கள் எல்லோருக்கும் ஈடு கொடுக்க வேண்டியது கிராமக் கர்ணமும் கி. மு. (கிராம முனிசீப்பு)களுந்தான். இது ஆச்சரியம் இல்லையா! ஒரு கிணற்றுக்கு மனுப் போடுகிறான் ஒரு விவசாயி. அந்த விவசாயிக்கு நிலம் சொந்தமா என்று பார்த்து 'சர்டிபிகேட்' வழங்க வேண்டியது கிராமக் கர்ணம் அல்லது கி. மு.வின் வேலை. அந்த விவசாயிக்குப் பணம் வாங்க வேண்டிய இடம் தாலுகா சப் டிரஷரி. இந்தப் பில்லில் முடிவான கையெழுத்துச் செய்ய வேண்டியது தலைமைத் தாசில்தார். இந்தக் கிணற்றைச் சுற்றிப் பார்க்கவும் வேலை நடப்பதைக் கண்காணிக்கவும் சாதாரண டிபுடி கலெக்டர். தாசில்தார் ரெவினியூ இன்ஸ்பெக்டர் முதலானவர்கள் இருந்தாலும் விசேஷ அதிகாரியாகக் கிணற்றுத் தாசில்தார்-ஒருவர் இருக்கிறார். இது எதற்காக! சர்க்காரிலே புதிய திட்டங்கள் பல போடுகிறார்கள். அவற்றுக்குப் புள்ளி விவரம் என்னவோ சொல்லுகிறார்கள். அதிகாரிகள் கூட்டம் அதற்கு மிக அவசியம் என்பதாகச் சொல்லுகிறார்கள். நடப்புக்கும் அவைகளுக்கும் சம்பந்தம் எவ்வளவு! குறை சொல்லும் கண்ணோடு பார்க்க வேண்டாம். நியாயமாகக் கவனிப்போம். ஒரு தாலுகாவில் சுமார் 100 கிராமங்கள் இருக்கலாம். ஒரு தாலுகாவுக்கு ஒரு தாசில்தார். அவர் ஏன் எல்லா வேலைகளையும் கண்காணிக்க முடியாது! கிளார்க்குகள் கொஞ்சம் கூடப் போடவேண்டும். கிணற்றுக்கு, ஜமீன் காரியங்களுக்கு, ஹரி ஜன நன்மைக்கு, தியாகிகளுக்கு நிலம் வழங்க, அதிகப்படி சாகுபடி, இப்படிப் புதிய பிராஞ்சுகள் திறந்து அதைக் கவனிக்க குமாஸ்தாக்கள் வேண்டும். ஒரு தாசில்தார் மூன்று மைல் சுற்றுப் பிரயாணம் செய்யக் கூடியவாறு மத்தியப் பிரதேசமான கிராமத்தில் முகாம்செய்து கொண்டு அந்தந்தப் பேப்பர்களைப் பைசல் செய்யலாம். ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர்கள் (டிபுடி கலெக்டர்) பிர்க்காவாரியாக எடுத்துக் கொண்டு மத்தியமான கிராமத்தில் முகாம் செய்து பேப்பர்களைப் பைசல் செய்யலாம்.

நான் அறிந்த வரையில் எந்த டிபுடி கலெக்டரும் இந்தக் காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் கிராமத்தில் முகாம் செய்வது கிடையாது. அந்நிய ஆட்சி நடந்த காலத்தில் ஆனைப்பட்ட சீமைத் துரைமார்கள் கூடக் கிராமத்தில்தான் முகாம் செய்வார்கள். அது மட்டுமா! அவர்கள் முகாம் செய்கிற 4, 5 தினங்களில் ஒரு நாள் மாலை நேரத்தில் கூட்டம் கூட்டுவார்கள். பக்கத்து 5, 6 மைல் சுற்றுப்புறக் கிராமங்களில் உள்ள குடித்தனக்காரர்கள் அந்தக் கூட்டத்துக்கு வருவார்கள். வந்து தங்கள் தங்கள் கிராமத்துக்கு வேண்டிய நீர்ப்பாசன, ரெவின்யூ, சுகாதார சம்பந்தமான தேவைகளைச் சொல்லிக் கலெக்டரிடம் எழுதியும் கொடுப்பார்கள். அவர் இன்னது செய்ய முடியும், இன்னது சென்னை சர்க்காரிடம் கேட்டுச் செய்ய வேண்டும் என்பதாக ஸ்தலத்திலேயே அறிவித்து விடுவார். குஷியான கலெக்டராயிருந்தால் தம் கைச் செலவில் பானகம் போட்டு எல்லோருக்கும் வழங்கச் செய்வார். இது கற்பனையல்ல, அடியேன் கண் முன்னால் நடந்தது. இந்தப் பக்கத்து மக்களுக்கு நன்றாகத் தெரியும்.

* * *

அதனால்தான் அன்றைய ஆட்சியும் இன்றைய ஆட்சியும் மக்கள் கண் முன் வந்து கூத்தாடுகின்றன. இந்த அவகேட்டைப் பார்த்து மனம் புழுங்குகிறார்கள். இப்படி ஒவ்வொரு துறையிலும், கிராமந்தோறும் தரிசுகள் அப்படி அப்படியே கிடக்கின்றன. கிராமக் கர்ணம் எழுதியது வேதம். அதிகாரிகள் மந்திரிகளைப் பார்த்து முதுகுப்புறத்தில் சிரிக்கிற காலம் இது. 'எம். எல். ஏ.க்கள், காங்கிரஸ் ஊழியர்கள், மந்திரிமார்கள் தப்பு செய்கிறார்கள் என்றே வைத்துக் கொள்வோம். நீங்கள் தப்புப் பண்ணலாமா! நீங்கள் சர்க்காரின் நிரந்தர உத்தியோகஸ்தர்கள் அல்லவா! ஜனங்களின் க்ஷேமலாபம் உங்களைப் பொறுத்ததல்லவா இருக்கிறது! நேற்று வரை வெள்ளைக்காரன் இருந்தான். இன்று காங்கிரஸ்காரர்கள் வந்திருக்கிறார்கள். நாளை வேறு யாரேனும் வரலாம். நீங்கள் கடமையையும் பொறுப்பையையும் ஒழுங்காகப் பேணி வந்தால்தானே தேசத்தின் கௌரவம் நிலைத்து நிற்கும்!'' என்பதாக ஒரு உத்தியோகஸ்தரிடம் சொன்னேன். பாவம், அவர் வயிற்றுப் பாடு அவருக்கு. தனக்குப் பின்னால் உள்ளவன் தன்னைத் தள்ளிவிட்டு மேலே டெபுடி தாசில்தாராகப் போய் விட்டானே யென்று கவலை.

''சரிதான் ஸார், உங்கள் வேதாந்தம்! உங்கள் மாதிரி நானும் பண்ணையாராக இருந்தால் ஊருக்கு உபதேசம் செய்வேன்'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். எனக்கு அதிசயமாக இருந்தது. ஆனல் உண்மை அப்படி இருக்கிறது. இந்தக் குறைபாட்டை நீக்க முடியாதா! காஷ்மீர்ச் சண்டையும், கொரியாச் சண்டையும் மூன்றாவது உலகயுத்த பீதியும் இவைகளை நீக்குவதற்குத் தடையா என்ன! திட்டம் வகுத்து 'இதைச் செய்' என்று அதிகாரிகளுக்கு உத்தரவிடக்கூடிய வளப்பம் ஏன் நம் மவர்களுக்கு இல்லை!

அந்த நாளில் ஜன சங்கியை எடுத்தார்கள் அல்லவா! 25 வீட்டுக்கு ஒரு என்யுமிரேட்டர் வீதம் கிராமங்களில் வசதியுள்ளவர்களை டெபுடி

கலெக்டர் வந்து கணக்கெடுக்கச் சொன்னார். இந்த நாளில் 100க்கு மேற்பட்ட வீட்டைக் கொடுத்து கிராமக் கர்ணத்தையும் ஏழை ஆசிரியர்களையும் ஏவி விட்டிருக்கிறார்கள். அவர்களும் மூக்கால் அழுது கொண்டே பேனாவைத் தொட்டிருக்கிறார்கள். இது ஏன்! வெள்ளைக்காரன் ஆட்சியைவிட மக்களிடத்தில் இந்த சர்க்காருக்குச் செல்வாக்கு குறைந்துவிட்டதா! அல்லது அதிகாரிகளின் தலையணை மந்திரம் அப்படிச் செய்ய வேண்டாமென்று சொல்லிற்றா!

இப்படி எத்தனை எத்தனையோ! சுருங்கச் சொல்லப் போனால் இப்பொழுது நமது மாகாணத்திலே இரு மூகாம்கள் தெரிகின்றன. ஒன்று ரெவின்யூ அதிகாரிகளும் அதைச் சார்ந்தவர்களும் மந்திரிமார்களும். மற்றொன்று காங்கிரஸ்காரர்கள், எம். எல். ஏ.க்கள். இந்த இரு மூகாம்களும் ஒன்றை மற்றொன்று குறை சொல்லித் தாக்கிக்கொண்டு, அதே சமயத்தில் தங்கள் தங்கள் ஊதியத்தில் மிக கவனம் செலுத்தி வருகின்றன.

ராணுவத்தை விஸ்தரிப்பது சர்வதேச அரங்கில் நமக்கு முக்கியம். போலீஸை அதிகரிப்பதில் உள்நாட்டு க்ஷேமம் இருக்கிறது. ஸிவில் அதிகாரிகளை விருத்தி செய்வதில் யாருக்கு லாபம்! ஒரு தாலூகாவுக்கு 4 டெபுடி தாசில்தார்கள், அவர்களுக்குரிய பியூன்கள், படிச் செலவுகள் இவர்களைக் கண்காணிக்க ஜில்லாவுக்கு இரண்டு டெபுடி கலெக்டர்கள்—இப்படிக் கூட்டிக் கொண்டு போவதனால் தேச அபிவிருத்தி எப்படி உண்டாகப் போகிறது!

* * *

நமது மதிப்புக்குரிய தலைவர் ஒருவர் சமீபத்தில், 'நமது அதிகாரிகளைப் பற்றி இப்பொழுது ஏகப்பட்ட புகார்கள் வந்துகொண்டிருக்கின்றன. இவர்கள் யாவரும் பிரிட்டிஷ் ராஜ்யத்தில் வேலை பார்த்தவர்கள். அப்பொழுது மிக்க திறமையுடன் நடந்து கொண்டவர்கள். அப்படிப்பட்டவர்கள் தேசம் சுதந்திரம் அடைந்ததும் எப்படித் திறமையற்றவர்களாகி விடுவார்கள்! நான் நம்ப முடியாது. அப்பொழுதைவிட இப்பொழுது நிர்வாகத்தில் ஏற்பட்ட வேலைப் பளுவே இந்தப் புகாருக்குக் காரணம்' என்பதாகச் சொன்னார்.

அவரைவிட நான் புத்திசாலி என்று சொல்ல வரவில்லை. ஆனால் நமது தலைவர் இப்படி நினைப்பது சரியல்ல என்பதே என் எண்ணம். தாலூகாவுக்கு ஒரு அதிகாரியாக வேலை பார்த்தவர் இப்பொழுது மூன்று நான்கு நபர்களாக வேலை செய்கிறார்கள். முன் மாதிரி வேலையும் கண்டிப்பாகவும் கண்காணிப்புடனும் நடப்பதில்லை. இதைக் கிராமவாசி உணருகிறான்.

அச் சமயம் அதிகாரிகளுக்கு மேல் அதிகாரிகளைத் தொட்டு பயம் இருந்தது. ஜில்லா கலெக்டர்கள் என்றால் யாரும் பயந்து வேலைசெய்ய வேண்டியதாயிருந்தது. ஜில்லா கலெக்டர் வெள்ளைக்காரன். அதிகாரிகள் கூட்டம் சுருக்கமாகவும் அனுபவம் உடையதாகவும் இருந்தது. இவைகளெல்லாம் இப்பொழுது இல்லை. ஒரு குமாஸ்தா, எம்.எல்.ஏ.வையும் கலெக்டரையும் காக்காய் பிடித்தால் போதும். இரண்டொன்று மூன்றும் வருஷத்தில் தாசில்தாராக வந்து விடலாம். அதற்குக் கணிசமான செல்வாக்கு, மதராஸ் செக்ரட்டரியேட்டில் ஒன்றிரண்டு உறவினர்கள், எம். எல். ஏ.க்கள் சர்டிபிகேட், முதலானவை இருந்தால் போதுமானது. இப்படி நாலு வருடமாக அதிகார யந்திரம் பதவிக் குவிந்து நிற்பதே சர்க்கார் அதிகாரிகளிடையில் புகார் ஏற்படுவதற்குக் காரணம். இதுவே நிர்வாக யந்திரம் விரிவடைவதற்கும் ஒரு காரணம். இவைகளை மாற்றி 1937-ல் இருந்த நிலைக்கு நமது சர்க்கார் ரெவின்யூ நிர்வாகத்தைக் கொண்டு வருவார்களானால் ஏராளமான பணம் மிச்சமாகும். ஜனங்களும் மன அமைதியுடன் வாழ்வார்கள்.

விட்டலபுரம்
24—1—51

வெங்கடாச்சாரி

○●○

## திரிகோணமலை

"பொன்னியின் செல்வ"னை வழக்கம் போல் இன்று வந்த கல்கியிலும் வாசிக்கும் பொழுது அதில் வரைந்திருந்த சுந்தர சோழ பாண்டியனிடம் முத்துப் பல்லக்கைக் காணிக்கையாகப் பெற்ற சிவபெருமான், பார்வதி படத்தைக் கண்டேன். இப்படத்திற்கும் சில நாட்களுக்கு முன் திரிகோணமலையில் ஒரு கிணறு வெட்டும் பொழுது கண்டெடுக்கப்பட்ட கோணேசர் கோவில் விக்கிரகங்களுக்கும் நெருங்கிய ஒற்றுமை இருக்கக் காண்கிறேன். அவ்விக்கிரகங்களின் படமொன்று இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

திரிகோணமலை திருஞான சம்பந்த மூர்த்தியால் பாடப் பெற்ற ஸ்தலம். இராவணனால் பூசிக்கப்பட்ட ஸ்தலம் என்று புராணமும் கூறுகிறது. பொன்னியின் செல்வன் நடந்த காலத்தைய சோழ மன்னனான குளக்கோட்டு மன்னனால் கட்டப்பட்ட கோவில் இது. இந்தியாவில் உள்ள வேதாரண்யம் என்னும் ஸ்தலத்தைப் போல் கடற்கரை ஓரமாக 400 அடி உயரத்தில் நாலு கோபுரங்களும் ஆயிரக்கால் மண்டபமும் பாபநாச கெங்கையும் (சிதம்பரத்தில் உள்ள சிவகெங்கையைப் போல் ஒரு கேணியும்) கருங்கற்களால் கட்டப்பட்டன. சிதம்பரத்தில் ஆனி உத்தரத்தன்று திருவிழாக் கொண்டாடுவது போல் இங்கும் அந்தக் காலத்தில் ஆனி உத்தரத் தரிசனம் நடந்ததாம். அந்த ஆயிரக்கால் மண்டபத்தில் உள்ள ஒவ்வொரு





கான்ஸ்டேபிள் :—இந்த வெல்ல மூட்டைகளை ஒரு ஆசாமி பதுக்கி வைத்திருந்தான், எடுத்து வந்துவிட்டோம்.

இன்ஸ் :—அது கிடக்கட்டும், அந்த ஆசாமி எங்கே ?

கான்ஸ்டேபிள் :—அவனை எங்கேயோ பதுக்கி வைத்துவிட்டார்கள். வைத்த இடம் மறந்து போய்த் தேடுகிறார்கள் !

---

தூணுக்கும் 14 அடி உயரத்தில் ஆயிரம் திரிகள் போடக்கூடியதாக தும்பொன்னால் செய்யப்பட்ட விளக்குகள் வைக்கப்பட்டிருந்தனவாம். ஆதி மூலத்தில் தங்கத்தால் செய்யப்பட்டு முடியில் பெரிய வைரக்கல் பதிக்கப்பட்ட 12 அடி உயரமுள்ள இரண்டு விளக்குகள் வைக்கப் பட்டிருந்தனவாம். இவை இரண்டும் கஜபாகு என்னும் இலங்கை மன்னனால் கொடுக்கப்பட்டவையாம்.

இக் கோவிலிலிருந்த கலசங்களும் மூலஸ்தான ஸ்தூபியும் தங்கத் தகட்டால் மூடப்பட்டிருந்ததால் 1627-ம் ஆண்டு அக்கடல் மார்க்கமாய்ச் சென்ற பரங்கியர், போர்ச்சுக்கீயர் ஆகியவர்களின் கண்களில் இந்தத் தங்க முடிகள் பட்டனவாம். உடனே அவர்கள் திரிகோணமலையில் இறங்கி, கோவிலில் உள்ள திரவியங்களையும் தங்கச் சாமான்களையும் கொள்ளையடித்து மத வெறியினால் கோவிலையும் இடித்துத் தரை மட்டம் ஆக்கி விட்டார்கள். இவர்களுக்குப் பின்வந்த டச்சுக்காரர் கோவில் கட்டப்பட்டிருந்த கருங்கற்களால் அவ்விடத்தில் தங்கள் பாதுகாப்புக்காக ஒரு கோட்டையைக் கட்டிவிட்டார்கள். இக்கோட்டைதான் இப்பொழுது போர்ட் பிரடரிக் (Fort Fredrick) என்று அழைக்கப்படும் கோட்டை. பரங்கியர் பிடிக்க வந்தபோது கோவிலில் இருந்தவர்கள் தங்களால் காப்பாற்றக்கூடிய சில விக்கிரகங்களை எடுத்துப் போய்த் தங்கள் வளவுகளில் புதைத்து வைத்தார்கள். இவ்விதம் புதைக்கப்பட்ட விக்கிரகங்களில் மூன்றுதான் சில நாட்களுக்கு முன் கண்டெடுக்கப்பட்டன.

இவ்விக்கிரகங்கள் கண்டு எடுப்பதற்கு இரண்டு வாரங்களுக்கு முன் 9—7—50ல் கொழும்பு டாக்டர் பாலேந்திரா ஒரு பொதுக் கூட்டத்தைத் திரிகோண மலையில் கூட்டினார்.

இக்கூட்டத்தில் டாக்டர் பாலேந்திரா பேசும்பொழுது, பழைய கோவில் இருந்த இடத்திலேயே ஒரு புதுக் கோவில் சோழ நாட்டுப் பாணியில் கட்டுவிக்கப் போவதாகச் சொன்னார். கோவில் கட்டியபின் எந்த விக்கிரகம் வைப்பது என்பது பற்றி ஒரு விவாதம் நடந்தது. ஆனால் 27—7—50ல் இவ் விக்கிரகங்கள் வெளிவந்தன.

இவ்விக்கிரகங்களை ஸ்ரீமான் நரசிம்மன் பார்வையிட்டார். அவர் இவைகள் மிகவும் பழமையானவை என்றும் மிகவும் அபூர்வமானவை என்றும் சொன்னார். பழைய கோவில் இருந்த இடம் இப்பொழுது திரிகோணமலைக் கடற்படைக்குச் சொந்தமாக இருக்கிறது. திருப்பணி வேலையைத் தொடங்குவதற்கு இலங்கைப் பாதுகாப்பு மந்திரி அவர்களுக்கு விண்ணப்பிக்கப் பட்டிருக்கிறது. ஸ்ரீமான் பாலேந்திரா கோவிலைக்கட்டி முடித்த பின்னும் பல திருப்பணி வேலைகள் மண்டபங்கள் ஆகியவைகள் செய்ய வேண்டி வரும். அதற்குப் பொது மக்களின் ஆதரவு வேண்டும்.

இலங்கை
21—1—51 கே. எஸ். சித்ரவேலு

○●○

## எங்கள் ஏமாற்றம்

நானும் என் குடும்பத்தினர்களும் திருவையாற்றில் நடக்கும் தியாகப்பிரம்மோத்ஸவத்திற்குச் சில காரணங்களினால் போக முடியவில்லையே என்று கவலைப்பட்டோம். பின்பு ரேடியோ மூலமாகவாவது அங்கு நடக்கும் நிகழ்ச்சிகளில் (முக்கியமாக ஆராதனையில் பாடும் பஞ்சரத்னக் கீர்த்தனைகள்) சில பகுதிகளைக் கேட்கலாமென்று ஆவலுடன் இருந்தோம். 27—1—51 காலை 8-30 அடித்த சில நிமிஷத்திற்குப் பின் மின்சார சக்தி நின்றதைக் கண்டு ஏமாற்றம் அடைந்தோம். நாங்கள் ஆவலுடன் இருந்தது பிசகு என்று உணரும் வகையில் நம் காருண்ய எலெக்டிரிக் அதிகாரிகள் நிறுத்தியது மிகவும் வருத்தமாக இருந்தது. மேற்கண்ட உத்ஸவத்திற்கு நம் மதிப்பிற்குரிய ராஜாஜி அவர்கள் விஜயம் செய்வது பாரத நாடு பூராவும் ஒரு மாதத்திற்கு முன்பே தெரியும். எலெக்டிரிக் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் அவசியம் தெரிந்திருக்குமென்று நம்புகிறேன். அப்படியிருக்க மேற்படி அதிகாரிகள் செட்டிநாடு பகுதி பூராவும் ஏன் மின்சாரத்தை நிறுத்தினார்கள் என்பது தெரியவில்லை. ஒருவேளை செட்டி நாடு தமிழிசைக்குத் தாயகமாக இருப்பதால் அவர்கள் இந்தத் தெலுங்குக் கீர்த்தனைகளைக் கேட்பது உசிதமில்லையென்று நினைத்தார்கள் போலும்.

காரைக்குடி
28—1—51 வி. எஸ். ரெங்கநாதன்




## 9. கப்பல் நகர்ந்தது

சமுத்திரக் கரையிலிருந்து ராஜகுமாரனும் சுந்தரியும் போன பின்பு அவர்களுக்குத் தெரியாமல் வனஜா அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தாள்.

வனஜாவைப் பார்த்த அரசன் திடுக்கிட்டுப் போனான்.

“அம்மா வனஜா, ஏன் ஒரு மாதிரி இருக்கிறாய்? உன் முகவாட்டத்துக்குக் காரணம் என்ன?”

“அப்பா அந்த மாயக்காரி, கடல் மோகினி-சுந்தரி-அகப்பட்டுவிட்டாள். ராஜகுமாரரிடம் இன்றைக்கு அவள் பேசின பேச்சு, அப்பப்பா!” என்று ஆத்திரத்தோடு சொல்லிக் கொஞ்சம் நிறுத்தினாள் வனஜா.

அரசன் இதைக் கேட்டதும் கடகட வென்று நகைத்தான்.

“வனஜா, நீ சொப்பனம் கண்டிருக்கிறாய். ராஜகுமாரன் தான் பைத்தியக்காரத் தனமாகச் சமுத்திரத்தில் யாரையோ என்னத்தையோ பார்த்து விட்டு, ‘சுந்தரி, சுந்தரி’ என்று உளறுகிறான் என்றால், அந்தப் பைத்தியம் உனக்கும் பிடித்து விட்டது போலிருக்கிறதே! கடல் கன்னிகையாவது கடலிலிருந்து வரவாவது! ஏதாவது மாயா மந்திரக் கதை படித்தாயோ!”

“அப்பா, உங்கள் பரிகாசமெல்லாம் இருக்கட்டும். அந்த மாயப் பெண்ணை நானே என்னுடைய கண்ணாலே பார்த்தேன். சமுத்திரத்திலிருந்து எழுந்து ராஜகுமாரனிடம் வந்தாள். அடேயப்பா! அவள் அழகு கண்ணைப் பறித்தது!” என்றாள் வனஜா.

“வனஜா, நீ சொல்லுவதெல்லாம் உண்மையா? இதெல்லாம் எப்பொழுது நடந்தது? இப்பொழுது அந்தச் சமுத்திர சுந்தரி எங்கேயிருக்கிறாள்?” என்று அரசன் பிரமிப்பும் கோபமும் கலந்த குரலில் கேட்டான்.

“அவ்வளவும் உண்மை! இன்றைக்குக் காலையில் நடந்தது, அப்பா!”

“வனஜா, நடந்ததை யெல்லாம் விவரமாகச் சொல்லு!”

“அப்பா, இன்று காலையில் எழுந்ததும் வழக்கம் போல் உலாவப் போகலாம் என்று புறப்பட்டேன். ராஜகுமாரர் அவர் அறையில் இல்லை. நேரே கடற்கரைக்குச் சென்றேன். அங்கே அவர் பித்துப் பிடித்தவர் மாதிரி சமுத்திர அலைகளைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். நான் அவருக்குத் தெரியாமல் ஒரு ஓடத்துக்குப் பின்னால் மறைந்து கொண்டு கவனித்தேன். பால் போன்ற வெண்மையான அலைகளுக்கு மத்தியிலிருந்து சமுத்திர சுந்தரி தன் கருமையான கூந்தல் அலைகளில் புரளத் தோன்றினாள். வர்ணப் பட்டாடையுடன் நல்ல ஆபரணங்கள் பூண்டு அவள் வர்ணிக்க முடியாத அழகோடு விளங்கினாள்!” என்றாள் வனஜா.

“வனஜா நீ சொல்லுவதைக் கேட்க மிகவும் ஆச்சரியமாயிருக்கிறதே! இப்பொழுது அவள் எங்கே?” என்று கேட்டான் அரசன்.

"ராஜகுமாரர் அவளை அழைத்துக் கொண்டு அரண்மனைப் பக்கம்தான் வந்தார். நான் அவர்களுக்குப் பின்னாலேயே கொஞ்ச தூரத்தில் அவர்களுக்குத் தெரியாமல் வந்தபடியினால் அவர்கள் அரண்மனைப் பிரதான வாயிலுக்குள்ளே நுழைந்ததைத் தான் பார்க்க முடிந்தது. அப்பா, நீங்கள் ராஜகுமாரரை இது சம்பந்தமாக ஒன்றும் விசாரிக்க வேண்டாம். என்ன நடக்கிறது என்று பார்க்கலாம்!" என்றாள் வனஜா.

சபாமண்டபத்தில் வழக்கம்போல் நகரத்து முக்கியமான பிரமுகர்களெல்லோரும் வந்து அவரவர்களுக்கு உரிய ஆசனத்தில் அமர்ந்திருந்தனர்.

ராஜகுமாரன் வருவான் என்று அரசன் எதிர்பார்த்தது பிரயோஜனம் இல்லாமற் போய் விட்டது. அரசன் சபாமண்டபத்திலிருந்து புறப்பட்டுப் போகும் வரையில் ராஜகுமாரன் வரவில்லை.

சற்று நேரத்துக்கெல்லாம் ராஜகுமாரன் வந்தான்.

"இளவரசரே, இன்று காலையிலிருந்து உங்களைப் பார்க்கவேயில்லையே! உட்காருங்கள்!" என்று அரசன் அன்போடு சொன்னான்.

"மகாராஜா, ஒரு ஆச்சரியமான சமாசாரம் உங்களுக்குச் சொல்ல வேண்டும். அந்த சமுத்திர சுந்தரி கிடைத்து விட்டாள். தங்களிடம் இச் சமாசாரத்தைச் சொல்லிவிட்டு அழைத்து வரலாம் என்று அவளை வஸந்த மண்டபத்தில் இருக்கச் சொன்னேன்!" என்று ராஜகுமாரன் மெதுவாக ஆரம்பித்தான்.

உடனே அரசன் 'கட கட' வென்று சிரித்தான்.

"இளவரசரே, என்னிடம் விளையாடுகிறீரா? சமுத்திர சுந்தரியாவது வரவாவது! யாரை ஏமாற்றுகிறீர்? நான் நம்பவே மாட்டேன்!"

"மகாராஜா, இப்பொழுதே அவளை இங்கே அழைத்து வருகிறேன். அப்பொழுது நம்புவீர்கள் அல்லவா?" என்று சொல்லிவிட்டு ராஜகுமாரன் எழுந்து வஸந்த மண்டபத்தை நோக்கி விரைவாகச் சென்றான்.

சற்று நேரத்துக்கெல்லாம் அரசனுக்குத் தன் கண்களை நம்பவே முடியவில்லை. தன் எதிரே நிற்பது மானிடப் பெண்ணா அல்லது தெய்வ லோகத்தைச் சேர்ந்த அப்ஸரஸா என்று அவனால் நிச்சயிக்க முடியவில்லை. சுந்தரியும் ராஜகுமாரனும் வாய் பேசாமல் நின்றனர்.

"இளவரசரே, இந்தப் பெண்தான் சமுத்திர சுந்தரியா? இவளைத்தான் நீங்கள் சமுத்திரத்திலிருந்து கண்டு பிடித்தீர்களா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் அரசன்.

அந்தச் சமயம் பார்த்து ராஜகுமாரி வனஜா அங்கே வந்தாள்.

"அப்பா, இவள் சமுத்திர சுந்தரி என்பதை நாம் எப்படி நம்ப முடியும்? ராஜகுமாரர் அதைச் சரியானபடி ருசுப்படுத்துவாரா? அதைக் கேளுங்கள், அப்பா!" என்றாள் வனஜா.

இதைக் கேட்டதும் ராஜகுமாரனின் முகம் கோபத்தால் சிவந்தது.

"மகாராஜா, நீங்கள் எப்படி விரும்புகிறீர்களோ அப்படி ருசுப்படுத்திக் காட்டுகிறேன்!"

"அப்பா, இந்தப் பெண் சமுத்திரத்தில் மீண்டும் இறங்கி முழுகிப் பழையபடி கரையேற வேண்டும். அதற்கு ராஜகுமாரர் ஒப்புக் கொள்ளுகிறாரா என்று கேளுங்கள், அப்பா!" என்று வனஜா சொன்னதும் ராஜகுமாரன் திகிலடைந்தான். அதற்குச் சம்மதிப்பதைத்



தவிர வேறு வழி தோன்றவில்லை அவனுக்கு. வனஜாவுக்கு ஒரே ஆனந்தம். சுந்தரி ஜலத்தை நெருங்கினால் மீண்டும் பழைய உருவத்தை அடைந்து விடுவாள் என்னும் உண்மை அவனுக்குத் தெரியுமல்லவா?

**ஒரு விடுகதை**

**அரைப்படி நெல்குத்தி**
**ஐயனுக்குப் பொங்கல் இட்டுச்**
**சின்னி தின்றது சின்னி**
**மக்களெல்லாம் தின்றது**
**பொழுது விடிய அரைப்பானை**
**பழையது**

“நாளைக்கு மாலை நாலு மணிக்குக் கடற்கரையில் நீங்கள் சுந்தரி கடலிலிருந்து வந்தவள்தான் என்பதை ருசுப்படுத்த வேண்டும்!” என்று மகாராஜா கூறிவிட்டு எழுந்து போய் விட்டார். வனஜாவும் அவரைத் தொடர்ந்தாள்.

ராஜகுமாரனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. சுந்தரியும் கவலையில் ஆழ்ந்தாள். ‘எத்தனையோ கஷ்டப்பட்டு, கண்ணீர் விட்டுக் கடல் கன்னிகை உருவம் மாறிப் பெண்ணுருவத்தை அடைந்தும் எனக்கு அதிர்ஷ்டம் இல்லையே!” என்று நினைத்துக் கண்ணீர் விட்டாள்.

அன்று மாலை நாலு மணிக்கு முன்னதாகவே அரசனும் பரிவாரங்களும் மந்திரிமார்களும் ராணியும் தோழிகளும் வனஜாவும் கடற்கரையில் வந்து கூடி விட்டனர்.

ராஜகுமாரன் சோர்ந்த முகத்தோடு சமுத்திரத்தை நோக்கியபடி நின்று கொண்டிருந்தான்.

சுந்தரி சமுத்திரராஜனையும் தனக்கு மானிடப் பெண்ணுருவத்தைத் தந்த முனிவரையும் தியானம் செய்து கொண்டு விடு விடு என்று, அலை மோதும் சமுத்திரத்தில் இறங்கினாள். அலை அவளை விழுங்கியது. அதைக் கண்ட ராஜகுமாரன் துடித்தான்.

அடுத்த விநாடி ஒரு ஆச்சரியம் நிகழ்ந்தது. சடை முடி தரித்த முனிவர்—முன்பு சுந்தரியைக் காப்பாற்றியவர்—கரைக்குச் சமீபமாக இருந்த மலைப் பாறை மீது தோன்றினார். “சுந்தரி, வா!” என்று கைகளை உயரத் தூக்கி அழைத்தார். உடனே கடல் கன்னிகை உருவத்தில் சுந்தரி வேகமாக நீந்திக்கொண்டு பாறைக்கு அருகில் வந்து முனிவரை வணங்கினாள். முனிவர் அவளை ஆசீர்வதித்தார். மறு நிமிஷம் கடல் கன்னியாகிய சுந்தரி முன்னைக் காட்டிலும் அதிக அழகுடன் புதுப் புடவையும் ஆபரணங்களும் ஜொலிக்க மானிடப் பெண் உருவத்தை அடைந்தாள்.

கரையில் இருந்த அரசனும் வனஜாவும் ராணியும் மற்றும் உள்ள பரிவாரங்களும் ஆச்சரியத்தினால் ஸ்தம்பித்துப் போய் விட்டனர். தாங்க முடியாத அதிசய உணர்ச்சி காரணமாக ஒருவருக்கும் ஒன்றும் பேசத் தோன்றவில்லை.

“சுந்தரி, நீ இனி என்றும் மானிடப் பெண்ணாகவே இருப்பாய்!” என்று கூறி முனிவர் மறைந்து விட்டார்.

அரசனும் வனஜாவும் ராஜகுமாரனிடம் மன்னிப்புக் கோரினார்கள்.

“மகாராஜாவே, வனஜாவினிடமோ தங்களிடமோ எனக்குக் கொஞ்சங் கூடக் கோபம் இடையாது. உங்களால் தானே சுந்தரியின் உண்மை வரலாறு எல்லாருக்கும் தெரிய வந்தது?” என்றான் ராஜகுமாரன்.

மறுநாள் ராஜகுமாரனின் தகப்பனாரும் தாயாரும் அவன் தம்பியும் கப்பலில் வந்து சேர்ந்தார்கள். அரண்மனையில் அவர்களுக்குப் பிரமாதமான வரவேற்பு அளிக்கப்பட்டது.

சமுத்திர சுந்தரியைப் பார்த்து ராஜகுமாரனின் தகப்பனாரும் தாயாரும் ஆச்சரியப்பட்டார்கள். அவள் கதையைக் கேட்டதும் அவர்களுடைய ஆச்சரியம் தாங்க முடியாததாகி விட்டது.

ராஜகுமாரனுடைய தம்பி அவனைப் போலவே இருந்தான். ஆகவே அவனுக்கு வனஜாவைக் கலியாணம் செய்து வைப்பதாக நிச்சயிக்கப்பட்டது. இரண்டு கல்யாணங்களும் பிரமாதமாக அரண்மனையில் நடந்தன.

கல்யாணம் முடிந்ததும் ராஜகுமாரனும் சுந்தரியும், இளைய ராஜகுமாரனும் வனஜாவும் அரசனின் அலங்காரமான கப்பலில் அவர்களுடைய தாய்நாட்டுக்குப் புறப்பட்டார்கள். நடுக் கடலில் சுந்தரியின் சகோதரிகள் இருவரும் வாழ்த்தினர். **(முற்றும்)**

# அன்பின் அலைகள்

ரா. வீ.



அன்பின் அலைகள் ஆலிங்கனம் செய்துகொண்டிருந்தன. அவன் தன் புன்முறுவலில் உலகத்தின் பொன்னிறத் திரையைப் பார்த்தான். அவனது அனுபவமற்ற வாழ்க்கை, சுக ஜீவனத்தின் பொருட்டு கற்பிக்கை யென்னும் வர்ண விசித்திர வலையைப் பின்னிக் கொண்டிருந்தது. அதைக் கண்ட அவன் உள்ளத்தின் ஒரு மூலை பரிகசித்தது. அந்தச் சிரிப்பில் அவனுக்கு மாபெரும் சாம்ராஜ்யத்தையே வெற்றி கொண்டுவிட்டது போன்ற கர்வம் தொனித்தது— ஆனால் அழுகையிலோ அறியாக் குழந்தையின் எளிய விசிப்பு விளையாடிக் கொண்டிருந்தது!

அவனுக்கு வாழ்க்கையில் அலாதிப் பற்றுதல். ஐசுவரியத் திமிர் இன்பக் கடலின் பயங்கரப் பேரலைகளுடன் போரிடத் தயாராயிருந்தது. இதுதான் சரியான தருணம் என்று எண்ணினான் அவன். அழகி பூத் தொடுப்பதில் முனைந்திருந்தாள். கர்வத்தின் வெறியில் அவன் 'கட கட' வென்று சிரிக்கலானான். அவனுக்குத் தன் வெற்றியில் அலாதி ஆனந்தம் ஏற்பட்டது!

"ஏன்? வாழ்க்கையிலே விலை மதிப்பற்ற வேலை இதுதானா?" என்று அவன் பூத் தொடுத்துக் கொண்டிருந்த யுவதியைப் பார்த்துக் கேட்டான்.

அழகி இமை கொட்டாமல் அவனையே பார்க்கலானாள்.

"பேசாமல் இருக்கிறாயே, சொல்லேன்!" என்று தூண்டினான் இளைஞன்.

"உலகத்தின் அத்தனை சுகத்தையும் சேர்த்துக் கொண்டு நாம் இந்த உலகத்தில் இன்பமாக வாழ்வது எப்படி என்றுதான் யோசிக்கிறேன்!" என்றாள் அந்த யுவதி.

"இதில் உனக்குச் சந்தேகம் ஏற்படுவானேன்?"

"உலகத்தைப் பார்த்துத்தான்!"

"உலகத்துக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்?"

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று எனக்குப் புரிந்தால்தானே!"

"நான் உன்னைத்தான் என் சின்னஞ்சிறு உலகமாக எண்ணுகிறேன்!"

"நான் என்ன எண்ணுகிறேன், தெரியுமா? என் வாழ்வின் ஆழ்ந்த இருள் சூழ்ந்த பிரதேசத்தில், சுடர்விட்டு ஒளி வீசும் ஒளிப் பிழம்பாக உங்களை எண்ணியிருக்கிறேன்."

"சாயா! என் வாழ்க்கையின்பமே! உன் கண்ணிமைப்பிலே இனம் தெரியாத சங்கீதத்தின் இன்னிசையை நான் பருகுகிறேன்" என்றான் இளைஞன்.

"உலகம் மிகவும் மனோரம்மியமானது!" என்று முடித்தாள் யுவதி.

இரவும் பகலும் கண்மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் புரண்டு கொடுத்துக் கொண்டன. இயற்கையின் எழில் காட்சிகளுடன் கூடவே, உள்ளத்து ஆவல்களும், பேசாமல் காதோடு காதாக ஏதோ சொல்லி வானத்து இன்பக் கனவுகளைப் போன்ற காட்சிகளைக் கண் முன் கொண்டு வந்து நிறுத்தின.

வாழ்க்கையின் நடன அரங்கத்திலே எழுந்த முதற்காட்சி அதுதான்! பயமின்றி உலகத்தின் முன்னிலையிலே அவன் கண்களைத் திறந்தான்.

மக்கள் கூரிய சொற்களால், "பசியால் மடிவாய், அழுவாய்! ஜாக்கிரதை!" என்று குத்திக் காட்டினர்.

அவன் திடசித்தத்துடன், "கவலையில்லை!" என்று பதில் அளித்தான். அவனுக்குத் துணிவு துணை புரிந்தது.

யுத்தகளத்தில் 'மெஷின் கன்'களைப் போல சமூகம் அவனைக் குறி வைத்தது. மக்கள் எரித்து விடுபவர்கள் போல அவனைப் பார்த்தனர்.

## 2

"சாயா! உனக்கு அந்த நாள் நினைவிருக்கிறதா?"

"எந்த நாள்?"

"உனக்கும் எனக்கும் அறிமுகம் ஏற்பட்ட நாளைத்தான் சொல்கிறேன்!"

"அதை எப்படி மறக்கமுடியும்?"

"அப்பொழுதெல்லாம் மகிழ்ச்சி அழைக்காமலேயே ஓடிவந்து நம் முன் கைகட்டிக் கொண்டு நிற்கும் அல்லவா? உன் பெயரே ஒருவித வெறியை உண்டு பண்ணிய அந்தக் காலம் எவ்வளவு இனிமையாக இருந்தது என்பதை நினைக்கும் பொழுது என்ன ஆனந்தமாயிருக்கிறது. தெரியுமா? ஆற்றுக்கு அக்கரையிலே, மணற்பரப்

பிலே, உன் பெயரை எழுதி எழுதி நான் அழிப்பேன், உன் பெயர் மீது யாருடைய காலடியும் படக்கூடாது என்பதற்காக!''

''நான் என்ன செய்வேன் தெரியுமா? அரைகுறையாகத் திறந்த கண்களால் சந்திரனில் தங்கள் உருவத்தைக் கண்டு, என் நிலையை மறந்து மோனத்தில் ஆழ்ந்து போய் அமர்ந்திருப்பேன்!''

''அன்பே! இவ்வாழ்க்கையில், இந்த சுயநலக்கார உலகை வெறுத்து, உன்னை மட்டும் நான் விரும்பினேன்! அப்பா! உலகம் தயை தாட்சண்யமற்றது!''

''உலகம் கிடக்கட்டும். நாமிருவரும் இங்கே எதற்காக வந்தோம் என்பதே ஒரு ரகசியமாக இல்லையா?''

''உலகம் ஆழமான சமுத்திரம். நானும் நீயும் அதன் வெறி பிடித்த அலைகள். அதில் இம்மாதிரி எத்தனையோ அலைகள் எழும்புகின்றன. அந்த அலைகளைப் போலவே நாமும் ஒரு நாள் துள்ளிக் குதித்துவிட்டு அதிலேயே மறைந்து விட வேண்டியதுதான்! இதைவிட அதிகமாக எனக்கு வேறொன்றும் தெரியாது!''

''இல்லை. நான் நினைப்பது வேறு. உலகம் ஒரு நாடக மேடை. நீங்களும் நானும் அதன் நடிகர்கள். நம் ஆட்டம் முடிந்ததும், அதன் திரையில் நாம் மறைந்து விடுவோம்''

இளைஞன் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து ஆகாயத்தை அண்ணாந்து பார்க்கலானான்.

## 3

அநேக ஆண்டுகள் கடந்துவிட்டன. நாளுக்கு நாள் மாறுதல் எதையோ முணுமுணுத்துச் சென்றது. சாயாவும் தன் ஆட்டத்தில் அலுப்புக் கொண்டாள். தினம் ஒரே காட்சி, ஒரே ராகம், ஒரே ஸ்வரத்தைக் கேட்டால் உள்ளத்துக்குப் பிடிக்காதுதானே?

அன்று சாயா வாட்டமுற்று உட்கார்ந்திருந்தாள். சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் என்ன நினைத்துக் கொண்டாளோ, தெரியவில்லை! தான் வளர்த்த பறவைகளை ஒவ்வொன்றாகக் கூட்டிலிருந்து விடுவிக்கலானாள். 'ஆகாயத்தில் தன்னிச்சையுடன் திரியும், இயற்கையின் இளநகையில் களிநடம் புரியும், சுதந்திர தேவதையின் மடியில் தவழ்ந்து விளையாடும் பறவைகளைக் கட்டி வைப்பது அநியாயம் அல்லவா?' என்ற எண்ணம் அவள் மனத்தில் அலை பாய்ந்தது. அந்த வளர்ப்புப் பறவைகள் —பறக்கும் சக்தியை இழந்து மறந்திருந்த அந்தப் பறவைகள் மரத்தின் இலையடர்ந்த கிளைகளில் அமர்ந்து சாயாவின் அந்த வேடிக்கையைப் பார்த்த வாறிருந்தன. அவற்றுக்கு அவளுடைய அர்த்தக் காரியம் ஒரு பெரிய புதிராகவே பட்டது.




இளைஞன் வேலையை முடித்துக்கொண்டு வீடு வந்து சேர்ந்தான். இக்காட்சியைக் கண்ட அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் ஆவலை அடக்க மாட்டாமல், ''சாயா, ஏன் இந்தக் கூடுகள் இன்று காலியாயிருக்கின்றன? — அடே, உன் முகம் ஏன் இப்படி மாறிக் கிடக்கிறது? என்ன விசேஷம், சொல்லு?'' என்று கேட்டான்.

சாயாவின் கண்களில் சுதந்திர தாகம் தோற்றமளித்தது. அவள் துடிதுடித்த குரலில், ''அடிமைத்தனை கூட்டில் சிறகடித்துக் கொண்டது; மழைக் காலத்துக் கார் மேகங்கள் அவற்றுக்கு என்ன செய்தி விடுத்தனவோ? அன்பைப் பருகித் தன் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளட்டும் என்று நான் அவற்றை விடுவித்து விட்டேன்'' என்றாள்.

''இதென்ன புது விளையாட்டு, சாயா? உன் சிந்தனையிலும் செய்கையிலும் மாறுதல் ஏற்படுகிறாற்போலிருக்கிறதே! நீ தனிமையில் உட்கார்ந்து கண்ணீர் சிந்தக் காரணம் என்ன?''

''ஒன்றுமில்லை! ஏதோ புதுவிதமான துயரம் ஒன்றை அனுபவிக்கிறேன்''

''அதென்ன அது?''

''அதை வெளியிட முடியவில்லையே!''

''அதற்கு ஏதாவது மருந்து உண்டா?''

சாயா மௌனம் சாதித்தாள். இளைஞன் சாயாவையே பார்க்கலானான். இருவருடைய கண்களும் தங்கள் மோன பாஷையில் ஏதோ பேசின.

இளைஞனுக்கு எதுவும் சொல்லத் துணிவு ஏற்படவில்லை. வேடிக்கையான பிரசினையாக இருந்தது!

மறுநாள் இளைஞன் திரும்பி வந்த பொழுது சாயா அங்கே இல்லை. சாயா அவன் உள்ளத்தில் வானவில்லைப் போன்ற இந்திர ஜாலப்

புன்முறுவலை விட்டு மறைந்து விட்டாள். அதற்கப்புறம்தான் சாயா இந்த வாழ்க்கையில் திருப்தி அடையவில்லை என்பதை அந்த இளைஞனால் உணர முடிந்தது.

அந்தச் சூன்யமான வீட்டில், இருட்டின் நிழலில், ஏமாற்றம் தன் நாட்டியத்தைக் காண்பித்துக் கொண்டிருந்தது. இளைஞனும் வீட்டை விட்டு வெளியேறி விட்டான்; வழி மறந்து திரியலானான்.

## 4

மனதில் வருத்தம் குடிகொண்டது. உள்ளத்தில் தீ கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தது. உலகத்தின் எழில், முதல் நாள் இரவு காணும் சொப்பனத்தைப் போல அழிந்து விட்டது. எந்தச் சாயாவை நம்பி உலகத்தின் பந்தனங்களிலிருந்து அவன் கட்டு அறுத்துக் கொண்டிருந்தானோ, அவளே அவனை விட்டு விட்டுப் போய்விட்டாள். அவனுக்குத் தன்னவன் என்று யாருமே இல்லை. வாழ்வதற்கு ஏதாவது சுகம் இருந்தால்தானே?

தன்னை அழித்துக்கொண்டு விடவேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டாலும் மனிதன் எவ்வித விருப்பு வெறுப்பும் இன்றி, எளிதில் பிராணத் தியாகம் செய்துகொள்ள முற்படுவதில்லை. வாழ்வில் உள்ள மோகம், தினமும் புதுப் புது வேடிக்கைகளைப் பார்ப்பதற்குத் தான் தூண்டுகிறது. பிரளயத்தின் பயங்கரப் புயல் எழுந்தாலும், அதைக் காண அதற்கு அளவற்ற ஆசை!

மனதை மாற்றி மகிழ்விப்பதற்காக அவன் நாடகம் பார்க்கப் போகலானான். ஒரு நாள் எதேச்சையாக, "நாம், உலகத்து நாடக அரங்கத்தின் நடிகர்கள்! என்று சாயா சொன்னது நினைவுக்கு வரவே, நாமும் செயற்கை நாடகங்களில் ஏன் நடிக்கக் கூடாது?" என்ற எண்ணம் அவன் உள்ளத்திலே எழுந்தது.

சில தினங்களுக்குப் பிறகு அவனுக்கு ஒரு பிரபல நாடகக் கம்பெனியில் இடம் கிடைத்தது. அவன் நீண்ட விழிகளும் கருங்கூந்தலும் நடிகனுக்குத் தகுந்தவையாகவே அமைந்திருந்தன!

அவன் அந்தக் கம்பெனியின் மூலம் தன் திறமையைக் காட்டலானான். அவன் நடிப்புத் திறனைக் கண்டு ஜனங்கள் அதிசயித்தனர். 'சபாஷ், சபாஷ்!' என்ற சப்தம் நாடகக் கொட்டகையில் எதிரொலித்தன. நாளுக்கு நாள் அவன் பெயரும் புகழும் அதிகரிக்கலாயிற்று. கீர்த்தி அவனெதிரே கைகட்டி நின்றது. அவன் நாடகத்தில் முக்கிய கதா பாத்திரனாகத் தோன்றி நடிக்கலானான்.

## 5

'ஆர்ய நாடக மண்டலி' பாரத நாட்டுப் பழம் பெரும் நாடகங்களை நடித்துக் காட்டுவதில் புகழ் பெற்றிருந்தது. ரசிகர் குழாம், அந்தக் கம்பெனியின் நாடகத்தைக் கண்டு களிக்க, எந்த நகரத்திலும் ஆவல் கொண்டிருந்தது.

அன்று 'வசந்த சேனை' நாடகம்.

அவன் சாருதத்தனாக நடித்தான். நாடகக் கொட்டகையில் ஏகக்கூட்டம்! அவன் மேடைக்கு வந்து சுற்றுமுற்றும் ஒரு முறை நோக்கினான். மிகப் பிரசித்திபெற்ற நடிகன் ஆகையால் சந்தோஷ ஆரவாரம் கொட்டகையைக் கிடுகிடுக்கச் செய்தது.




அவன் ஆச்சரியத்தினால் பார்த்தான். அவனுக்குச் சாயா வந்திருப்பது போலப் பிரமை ஏற்பட்டது. அவனுக்கு ஏற்பட்டது வெறும் பிரமையல்ல; உண்மையிலேயே சாயா வந்திருந்தாள். தன் கணவனுடன் முதல் வரிசையில் உட்கார்ந்து, அந்த அற்புதமான காட்சியைக் கண்டு களித்துக் கொண்டிருந்தாள்.

அவன் இருமடங்கு உற்சாகத்துடன் அன்று நடித்தான். ஜனங்கள் மெய்ம் மறந்து அனுபவித்தனர். ஆயிரக் கணக்கான கண்கள் அவனை விட்டு அகலவே இல்லை.

கைப்பிடித்த கணவனுடன் இன்ப வாழ்க்கையிலே ஈடுபட்ட பின் சாயாவின் இதயத்திலிருந்து அந்த இளைஞன் தேய்பிறைச் சந்திரனைப்

போலச் சிறிது சிறிதாகத் தேய்ந்து கடைசியில் மறைந்தேகூடப் போய்விட்டான். அவன் மனம் அந்த நடிகனின் அபார நடிப்பில் ஈடுபட்டிருந்ததே யொழிய அவனை இன்னான் என்று ஆராய்வதில் ஈடுபடவில்லை. காணும் காட்சியிலே கருத்து ஒருமித்த பின்னர் வேறு விஷயங்களில் கருத்துச் செல்லாதல்லவா?



* * *

தூக்கு மேடைக் காட்சி நடந்து கொண்டிருந்தது.

சாருதத்தன் கொலையாளிகளுக்கு நடுவே தூக்குமரத்தக் கருகில் நின்று கொண்டிருந்தான். கொலையாளி, பழையகாலத்து வழக்கப்படி, குற்றத்தைக் கூறிக் கொண்டிருந்தான்:

"இந்தச் சாருதத்தன் தன்னை நம்பின பெண்ணை — இந்த நகரத்துக்குள்ளேயே 'அழகி' என்ற பிரசித்தி பெற்ற வசந்த சேனையைக் கொலை செய்து விட்டான். நியாய ஸ்தலம், இவனைத் தூக்கிலிட உத்தர விட்டிருக்கிறது. எல்லோரும் இந்தச் சம்பவத்தி லிருந்து படிப்பினை கற்றுக்கொள்ள வேண்டும்......"

பார்வையாளர் கூட்டத்தில் முன் வரிசையில் உட்கார்ந்திருந்த சாயா, தன் கணவன் பக்கம் திரும்பி "பார்த்தீர்களா, 'பெண்கள் புருஷர்களை ஏமாற்றி விடுகிறார்கள்!' என்று சொல்வது பொய் தானே? காதலே உருவான இந்த வசந்த சேனை, கல் நெஞ்சமே உருவெடுத்த காதலனின் தீச்செயலுக்கு உள்ளாகும்படி ஆகி விட்டது! உண்மையில் இந்தப் புருஷர்கள் தான் கல் நெஞ்சக்காரர்கள்!" என்றாள்.

சாயாவுக்கு வசந்த சேனையின்மீது அனுதாபம். அவள் சாருதத்தன் தூக்கில் தொங்குவதைப் பார்க்க விரும்பினாள். ஆனால் அவள் கணவனுடைய உள்ளத்திலோ இனம் தெரியாத பீதி குடி கொண்டு வதைத்தது.

"ஏன்? பெண்கள் மீது இம்மாதிரிக் குற்றம் சாட்டுவது தப்புத்தானே?" என்று மறுபடியும் கேட்டாள் சாயா.

அவன் பதில் பேசவில்லை. நாடக மேடையில் நாடகம் நடந்து கொண்டிருந்தது. அந்தப் பயங்கர முடிவைக் கண்டு அவன் பயந்து கொண்டிருந்தான்.

சாருதத்தனைச் சீக்கிரம் தூக்கில் ஏற்ற வேண்டித் துரிதப்படுத்திக் கொண்டிருந்தார்கள். சாருதத்தன் மேடையில் ஏறினான். தூக்கு மேடை இந்தக் காலத்து முறையில் அமைக்கப்பட்டிருந்தது.

சாயாவுக்கு அந்தப் பயங்கரக் காட்சியைக் காணச் சகிக்கவில்லை. தன் மென்மையைக் காட்டுவதற்காக, அவள் பயந்து போய்த் தன் கணவனை இறுகக் கட்டிக் கொண்டாள்.

"சாருதத்தா, உம், சீக்கிரம்! தூக்கில் ஏறு! ஏன் நிற்கிறாய்?" என்று அதட்டி மிரட்டிக் கொண்டிருந்தான் கொலையாளி.

சாருதத்தனாக நடிப்பவன், "சரி. வசந்த சேனையே இல்லாதபொழுது நான் உயிர் வாழ்ந்துதான் என்ன செய்யப் போகிறேன்? அதைவிடத் தூக்கில் ஏறுவது எவ்வளவோ உத்தமமானதுதான்!" என்று சொல்லித் தூக்கு மேடையில் ஏறுகிறான்.

இதே சமயம் வசந்த சேனை ஓடி வருகிறான். இன்னொரு புறமாக சர்விலகன், "சாருதத்தனை விட்டு விடுங்கள்! சாருதத்தனை விட்டு விடுங்கள்!" என்று கூறிக்கொண்டே ஓடி வருகிறான்.

நாடக மேடையில், சாருதத்தனைத் தூக்குமேடையிலிருந்து இறக்குவதற்காக சர்விலகன் கூவிக்கொண்டு வரும் கட்டம்.

ஆனால் இதென்ன? சாருதத்தனாக நடிப்பவன் உண்மையிலேயே தன் கால்களால் பலகையை நகர்த்திக்கொண்டுவிட்டானே? அடடே! அதோ தூக்கில் தொங்கவும் அல்லவா தொடங்கிவிட்டான்!

நாடக மேடையிலே ஒரே கூச்சல்! ஜனங்கள் என்ன செய்வது என்று புரியாமல் கைகளைப் பிசைந்தனர். செய்தி அறிந்ததும் நாடக மேடையின் மானேஜரும் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடி வந்தார். நாடகம் தடைப்பட்டது. தூக்கிலிருந்து காப்பாற்ற யாருக்கும் சட்டென்று வழி புலப்படவில்லை. அதற்குள் எல்லாம் தீர்ந்து விட்டது. நாடகமும் முடிந்து விட்டது!

மானேஜர் மேடையில் வந்துசொன்னார்:

"பிரசித்தி பெற்ற நடிகரான கிசோர் இன்று ஆட்டத்திலேயே தற்கொலை செய்து கொண்டு விட்டார். எங்கள் கம்பெனிக்கு ரத்தினமாகத் திகழ்ந்தவர். இன்று இவ்வுலகை நீத்து விட்டார். இச் சம்பவத்திற்காக நாங்கள் மிகவும் வருத்தமுறுகிறோம்."

'கிசோர்' என்ற பெயரைக் கேட்டதும் சாயா துணுக்குற்றாள்.

பழைய காலத்து நினைவுகள் அவளைப் பெருமூச்சு எறியச் செய்தன. அடுத்த கணம் அவளுடைய கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் முத்துப் போல் கீழே உருண்டு ஓடியது.




இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்த உலகத்திலே அதிசயமான திருமண வைபவம் ஒன்று நடந்தது. உலகப் பிரசித்தி பெற்ற ஒரு மகா வீரர் அந்தத் திருமணத்தை நடத்தி வைத்தார்.

மேற்படி வைபவம் உலக சரித்திரத்திலே முக்கியமான இடம் பெற்றிருக்கிறது எனில், அது எவ்வளவு பிரசித்தி பெற்ற மகத்தான காரியமாக இருக்கவேண்டும்!

அந்தத் திருமண வைபவத்தில் எத்தனை நாடுகள் பங்கு எடுத்துக் கொண்டன? அதன் பலா பலன்கள் என்ன?

இதை யெல்லாம் பற்றி இந்த இதழிலிருந்து ஆரம்பமாகும் 'மத்திய கேந்திரம்' கட்டுரைத் தொடரில் விவரமாகக் காணலாம்.

கிறிஸ்துவ சகாப்தம் ஆரம்பமாவதற்கு முந்நூறு வருஷங்களுக்குமுன் மகா அலெக்ஸாண்டர் உலக மகாவீரராக விளங்கினார். வெற்றி மேல் வெற்றி பெற்று, கிரீஸிலிருந்து சீனா வரையில் லட்சக்கணக்கான சதுர மைல் விஸ்தீரணம் உள்ள தமது சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தார்.

அவருடைய காலத்தில்தான் உலகத்திலே முன்பின் நடந்திராத அதிசயமான திருமணம் ஒன்று நடந்தது. அதை, ஆசியாக் கண்டத்துக்கும் ஐரோப்பாக் கண்டத்துக்கும் நடக்கும் திருமணம் என்று வீர அலெக்ஸாண்டர் பெருமையுடன் பிரகடனப்படுத்தினார்.

அதாவது ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் ஒற்றுமையும் அன்னியோன்னிய பாவமும் ஏற்படுவதற்காக அலெக்ஸாண்டர் ஒரு வழியைக் கண்டுபிடித்தார்.

அவருக்கு ஏற்கெனவே பல மனைவிகள் இருந்தும் கூட ஆசியாவைச் சேர்ந்த ஒரு பெண்ணை விவாகம் செய்து கொள்வதின் மூலம் ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படும் என்று நம்பினார். எனவே, அலெக்ஸாண்டர் பாரசீக மன்னரின் புதல்வியை விவாகம் செய்து கொண்டார். தமக்குக் கீழே இருந்த ஆயிரக்கணக்கான அதிகாரிகளையும் பதினாயிரக் கணக்கான சிப்பாய்களையும் கூடத் தம்முடைய உதாரணத்தைப் பின் பற்றும்படி வற்புறுத்தினார். அவர்களும் ஆசியாப் பெண்களை விவாகம் செய்து கொண்டனர். இவ்வாறாக, அலெக்ஸாண்டர் காலத்தில் அவரது கட்டளைக்கு இணங்க, பாரசீகத்திலும் வேறு சில ஆசியா நாடுகளிலும் பதினாயிரக்கணக்கான திருமணங்கள் கோலாகலமாக நடந்தன!

ஆனால் மேற்படி திருமணங்களினால் கோரிய பலன் கிடைக்கவில்லை. ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் உறவோ, ஒற்றுமையோ ஏற்படவில்லை. அதற்கு மாறாக வேற்றுமைதான் வளரலாயிற்று!

அலெக்ஸாண்டரின் யுக்தி பலித்திருந்தால், இரண்டாயிரம் வருஷங்களுக்குப் பிறகு அதாவது இந்த இருபதாம் நூற்றாண்டில் ரட்யார்ட் கிப்ளிங் என்ற பிரபல பிரிட்டிஷ் கவிஞர்,

கிழக்கு கிழக்குதான், மேற்கு மேற்குதான்;
இரண்டும் இணைவது எக்காலத்தும்
இல்லை காண்!

(East is East, West is West;
And never the twain shall meet.)

என்று பாடியிருக்க மாட்டார் அல்லவா?

அலெக்ஸாண்டரின் முயற்சி வெற்றி பெற்றிருக்குமாயின், ஆசியாவை ஒதுக்கி விட்டு உலகப் பிரச்னைகளை ஆராய்ந்து முடிவு செய்வது ஆபத்தாக முடியும் என்று ஜவாஹர்லால்ஜி இன்று அடிக்கடி வல்லரசுகளை எச்சரிக்கும்படியான நிலைமை ஏற்பட்டிராது அல்லவா?

* * *

**அது** எப்படியாயினும், நட்பு உணர்ச்சி காரணமாகவோ அல்லது ஆதிக்க நோக்கங் கொண்டோ ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் என்று கருதும் தேசம் எதுவும்,—அது எவ்வளவு பெரிய வல்லரசாக இருந்தாலும் சரி,—சில குறிப்பிட்ட நாடுகளின் தயவை நாடித்தான் தீரவேண்டும். ஆப்கானிஸ்தானத்திலிருந்து மேற்கே கிரீஸ் வரையிலும் உள்ள நாடுகளின் ஒத்துழைப்பைப் பெறாமல் ஐரோப்பாவும் ஆசியாவும் பரஸ்பரம் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்திக் கொள்வது மிகவும் அசாத்தியமான காரியம்.

பூகோளப் படத்தைப் பாருங்கள். ஆப்கானிஸ்தான், ஈரான் (பாரசீகம்), ஈராக், சௌதி அரேபியா, டிரான்ஸ் ஜார்டன், பாலஸ்தீனம், சிரியா, துருக்கி முதலிய நாடுகள் ஆசியாவையும் ஐரோப்பாவையும் மாத்திரம் அல்ல, ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா இந்த மூன்று மாபெரும் கண்டங்களையும் இணைக்கும் பாலத்தைப் போல் அமைந்திருக்கின்றன!

மேற்படி நாடுகளை ஐரோப்பிய வல்லரசுகள் மத்திய கிழக்கு நாடுகள் என்று குறிப்பிடுகின்றன. ஆனால் நாம் அதை மேற்கு ஆசியா நாடுகள் என்றே குறிப்பிடுவது பொருந்தும். அந்த நாடுகள் மேலே குறிப் பிட்ட மூன்று பெரிய கண்டங்களிலும் மத்திய கேந்திர நாடுகளாகக் கருதப்படுகின்றன.

இல்லாவிட்டால் வெகு சிறியப் பிரதேசமான பாலஸ்தீனம் உலகப் பிரச்னையாகியிருக்க முடியுமா? பாலஸ்தீனப் பிரச்னையினால் வல்லரசுகளுக்கும் ஐக்கிய நாடுகள் சபைக்கும் ஏற்பட்ட தலைவலி இன்னும் தீர்ந்த பாடில்லை என்பது இச்சந்தர்ப்பத்தில் குறிப்பிடத் தக்கது.

சென்ற மகா யுத்தத்தின் போதும், இன்றும் வல்லரசுகள் அந்த நாடுகளுடன் போட்டி போட்டுக் கொண்டு உறவாட முற்பட்டிருப்பதிலிருந்து, அவை எவ்வளவு கேந்திர முக்கியத்துவம் வாய்ந்தவை என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

சென்ற மகாயுத்தம் நடந்து கொண்டிருந்த போது, துருக்கியின் நட்பைச் சம்பாதிப்பதற்காகப் பிரிட்டனும் ஜெர்மனியும் போட்டி போட்டுக் கொண்டு செய்த சாகஸங்கள் எண்ணில் அடங்காது. இன்றும் எண்ணெய்ச் செல்வம் உள்ள பாரசீகத்தின் உறவைச் சம்பாதித்துக் கொள்வதற்காக ருஷ்யாவும் மற்ற வல்லரசுகளும் போட்டி போட்டு வருகின்றன. சமீப காலமாக, மத்திய கேந்திர நாடுகளின் தற்காப்பைப் பலப்படுத்தும் விஷயத்தில் அமெரிக்காவும் பிரிட்டனும் மிகவும் அக்கறை காட்டி வருவதின் மர்மமும் அதுதான்.

* * *

**ம**த்திய கேந்திர நாடுகள் இன்று திடீரென்று முக்கியத்துவம் பெற்று விடவில்லை. எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக அவை உலகத்தின் அச்சாணியாக இருந்து வந்திருக்கின்றன என்று சரித்திராசிரியர்கள் வர்ணிக்கிறார்கள். அந்தப் பிரதேசங்களில் எத்தனையோ கோரமான மதப் பூசல்கள் எழுந்திருக்கின்றன; திடுக்கிடத்தக்க அரசியல் பூகம்பங்கள் ஏற்



பட்டிருக்கின்றன; பயங்கரமான பொருளாதாரப் புயல்கள் அடித்திருக்கின்றன.

ஒரு காலத்தில் அந்த நாடுகள்தான் உலகத்தின் வர்த்தகப் போக்குவரவுக்கு இன்றியமையாத பாதைகளாக இருந்து வந்தன. ஆசியாவிலிருந்து ஐரோப்பாவுக்கும் ஐரோப்பாவிலிருந்து ஆசியாவுக்கும் வியாபாரிகள் சாரிசாரியாக ஒட்டகங்களின் மீது சரக்குகளை ஏற்றிக்கொண்டு போய் வந்தார்கள்.

உலகம் முழுதும் வியாபித்திருக்கும் கிறிஸ்துவ மதத்துக்கும், இஸ்லாம் மதத்துக்கும் பிறப்பிடம் மேற்படி பிரதேசங்கள்தான் என்பதையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இருநூற்றைம்பது வருஷ காலம் வரையில் சரித்திரம் கண்டிராத கோரமான மதப் போராட்டம் அங்குதான் நிகழ்ந்தது என்பது சரித்திரப் பிரசித்தமான விஷயம்.

ஏன், சரித்திரப் போக்கையே மாற்றியமைத்த பல சம்பவங்களும் மத்திய கேந்திர நாடுகளில்தான் நடந்தன!

1918-ம் வருஷம் முதலாவது உலக மகா யுத்தத்தின் முடிவில் மத்திய கேந்திரப் பிரதேசத்திலே பிரிட்டனின் செல்வாக்கு மேலோங்கி யிருந்தது. எனவே, இந்தியாவிலிருந்து துருக்கி வரையில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் பரவும்படி செய்வதற்கு இடம் ஏற்பட்டிருக்கிறது என்று பிரிட்டிஷார் கனவு கண்டனர். அந்தக் கனவை நிறைவேற்றுவதற்கான காரியங்களிலும் ஈடுபட்டனர். ஆனால், பிரிட்டனின் மேற்படி முயற்சி வெற்றி பெறுவதற்குப் போல்ஷிவிக் ருஷ்ய சர்க்காரும் துருக்கி தேசத்தில் சர்வ வல்லமையுடன் விளங்கிய கெமால் பாஷாவும் முட்டுக்கட்டையாக வந்து சேர்ந்தனர்!

எனினும் பாலஸ்தீனம், ஈராக் முதலிய பிரதேசங்கள் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தில் இருந்தன. எனவே, அவர்கள் தங்களுடைய சாம்ராஜ்யத்தை விஸ்தரித்துக் கொள்ள முடியாவிட்டாலும், ஐரோப்பாவிலிருந்து இந்தியாவுக்குச் செல்லும் பாதை தங்கள் கையிலிருந்து நழுவி விடாமல் பார்த்துக்கொள்ள முடிந்தது.

மத்திய கேந்திர நாடுகளின் முக்கியத்துவத்துக்கு மற்றொரு காரணமும் உண்டு. ஈராக், ஈரான் முதலிய நாடுகளில் ஏராளமாக எண்ணெய் உற்பத்தியாவதால் அங்கு தங்களுடைய வர்த்தக ஆதிக்கத்தையாவது நிலைநிறுத்திக் கொள்ள வல்லரசுகள் போட்டியிட்டு வருகின்றன. அதனால்தான் உலக அரசியல் பிரவாகத்தின் சுழலில் மத்திய கேந்திர நாடுகள் சிக்கிக்கொள்ள நேர்ந்திருக்கிறது.

சென்ற மகா யுத்தத்தின்போது மத்திய கேந்திர நாடுகளில் ஜெர்மனியின் ஆதிக்கமோ அல்லது செல்வாக்கோ ஏற்பட்டு விடாமல் தடுப்பதற்காகப் பிரிட்டனும் ருஷ்யாவும் பாரசீகத்தை ஆக்கிரமித்துக் கொண்டது ஞாபகமிருக்கலாம். அவ்வாறு ஆக்கிரமித்துக் கொண்டது மேற்படி வல்லரசுகளுக்கு மிகவும் சாதகமாகியது. அதன் பயனாக மத்திய கேந்திரப் பிரதேசத்துக்கும் ருஷ்யாவுக்கும் பாரசீக வளைகுடா வழியாக யுத்த தளவாடங்களையும் இதர சாதனங்களையும் அனுப்புவது சுலபமாகியது.

மேற்கு ஆசியா நாடுகள் கேந்திர ஸ்தானமாக விளங்குவதற்கு வேறொரு முக்கிய காரணமும் உண்டு. அதாவது துருக்கியை அடுத்துள்ள டார்டனல்ஸ் ஜலசந்தியும் சூயஸ் கால்வாயும் வர்த்தகப் போக்குவரத்தின் உயிர் ஸ்தானங்கள் என்று கூறுவது மிகையாகாது. அவை மத்திய கேந்திர நாடுகளால் தடுக்கப்பட்டு விடுமாயின் ஆசியாவுடன் ஐரோப்பாவின் வர்த்தகத் தொடர்பு அறவே கத்தரிக்கப்பட்டு விடும். ஐரோப்பிய வர்த்தகக் கப்பல்கள் ஆப்பிரிக்காவை அப்பிரதட்சிணமாகச் சுற்றி வருவதாயின் பதினாயிரம் மைல்களுக்கு மேல் அதிக தூரம் செல்ல வேண்டியிருக்கும். அதனால் மிகுந்த கால தாமதம் ஏற்படும். அத்தகைய போக்குவரத்தினால் நஷ்டம் ஏற்படுமே யொழிய லாபம் கிடைக்காது. அதனால்தான் இந்தியாவுக்குச் சுதந்திரம் அளிப்பதன் மூலம் மகத்தான தியாகம் செய்த பிரிட்டிஷார், நூறு மைல் நீளம் உள்ள சிறிய கால்வாயான சூயஸ் கால்வாயைத் தங்களுடைய ஆதிக்கத்திலிருந்து கைவிட மனமில்லாமல் தகராறும் பிடிவாதமும் செய்து வருகிறார்கள்.

மத்தியகேந்திர நாடுகள் விஷயத்தில் வல்லரசுகளின் கண்ணோட்டம் விழுந்திருப்பதற்குச் சரித்திர பூர்வமான ஒரு காரணமும் உண்டு. "எகிப்தின் எஜமானர்களாக இருப்போர்தான் இங்கிலாந்தை அடக்க முடியும்" என்று நெப்போலியன் கூறியதாகச் சரித்திரங்களில் காண்கிறோம். எகிப்து மக்கள் எவ்வளவோ புரட்சி செய்தும் கூட அங்கு பிரிட்டிஷார் தங்களுடைய ஆதிக்கத்தைக் கைவிட மனமிராமல் இருப்பதற்கு நெப்போலியனின் கூற்றும் ஒரு காரணமாக இருக்கலாம்!

இவ்வாறாக, மத்திய கேந்திரப் பிரதேசத்தையும், குறிப்பாக அரபு நாடுகளையும் சுற்றி வல்லரசுகள் அரசியல் சதுரங்கத்தில் ஈடுபட்டிருப்பதால், அந்தப் பிரதேசங்கள் இன்று உலகத்தின் கவனத்தை இழுத்து வருகின்றன. (தொடரும்)

# மணிப் புறா

### மா. கிருஷ்ணன்

என்னிடம் இரண்டு பழைய தமிழ் அகராதிகள் இருக்கின்றன. பல முறை செப்பனிட்டு அட்டை போடப்பட்ட இப் புத்தகங்களை எனது முன்னோர்கள் அதிகமாக உபயோகித்ததாகத் தெரியவில்லை. நான் இவைகளை அடிக்கடி பார்ப்பதுண்டு. சமீபத்தில், ''மணிப்புறா'' என்ற பதத்தின் அர்த்தத்தைத் தேடி அகராதிகளைப் புரட்டிப் பார்த்தேன். சிவப்புத் துணி அட்டையும் செல்லரித்த கறையும் கொண்ட முழுத் தமிழகராதியில் ''ஒரு விதப் பறவை'' என்று சுருக்கமாகப் பொருள் விளக்கியிருந்தது. நீலக் காகித அட்டை தரித்த தமிழ்-ஆங்கில அகராதியில் "Ring-necked Turtle Dove" என்று மட்டும் கொடுத்திருந்தது. அநேக வருஷங்களாக அநேக வித்வான்கள் ஆராய்ந்து இயற்றிய தற்காலப் பேரகராதிகளில் ''மணிப்புறா'' என்ற பதத்திற்குச் சரியான பொருள் கிடைக்காது. ஏனென்றால், எல்லா அகராதிகளும் மணிப்புறா என்பது ஒரு விதப் புறாவின் தனிப் பெயராக எண்ணி அர்த்தம் விளக்குகின்றன. இது ஒரு இனப் பெயர்—ஒரு பறவையைச் சுட்டிக் குறிக்கும் பெயரல்ல. மாடப்புறா போன்ற பெயரும் புறா இனத்தைச் சேராத சிறு வகைப் புறாக்களைக் குறிக்கும்.

ஆனால், இவ்விஷயத்தில் நமது அகராதிகளைக் குறை சொல்வதற்கில்லை. ஆங்கில அகராதிகளிலும் 'பிஜன்ஸ்' (Pigeons) என்ற புறா வகைக்கும் 'டவ்ஸ்' (Doves) என்ற மணிப்புறா வகைக்கும் என்ன வித்தியாசம் என்று விளக்கப்படவில்லை. அகராதி மொழியில் இவ்விரு இனங்களையும் பொதுவாகவே அநேகமாய்ப் பாராட்டியிருக்கிறது. ஆனால் இயற்கை சாஸ்திர ஞானிகளுக்கு இவையிரண்டும் வேறாக இருப்பது தெரியும். இந்த வித்தியாசம் மேற்பார்வைக்கு எப்படி விளங்கும் என்று எடுத்துரைப்பது சுலபமில்லை. இருந்தாலும், பறவைகளை நுட்பமாகக் கவனிப்பவர்களுக்கு இது புலப்படாமல் போகாது—பார்வையிலும் நடவடிக்கையிலும் தென்படும் இவ் வித்தியாசம், சொற்களில் அடக்குவது கஷ்டம். எனக்குத் தெரிந்த வரை புறாக்களுக்கும் மணிப்புறாக்களுக்கும் மேற்படையாகத் தோன்றும் வித்தியாசங்களைக் கீழே குறிப்பிடுகிறேன்.

புறாக்கள் தினமும் வெகு தூரம் பறக்கும் சுபாவமுள்ளவை. மணிப்புறாக்களும் நன்கு பறக்கும் சக்தியுள்ளவை. ஆனாலும் புறாக்களைப் போல் ஆகாயத்தில் உயர்ந்து, நடு வழியிறங்காது நீண்டு பறப்பதில்லை. நமது தமிழ்நாட்டுப் புறாக்கள் சற்றுப் பெரிதாகவும், கழுத்திலோ முகத்திலோ நீலமும் பச்சையுமாக ஜ்வலிக்கும் வர்ணமும், உடலில் ஈரச் சாம்பல் நிறமும், வால் இறக்கை நுனிகளில் கருப்பு நிறமும் கொண்டிருக்கும். இங்குள்ள மணிப்புறாக்கள் சிறியவை. அவைகளுள் மிகப் பெரிய புறாகூட மாடப்புறாவின் அளவிராது. மேலும், அவைகளின் சிறகுப் போர்வையில் ஒரு விதப் பஞ்சடைந்த மிருதுவான தோற்றமும், வெண் சாம்பலும் வாடின ரோஜா புஷ்ப வர்ணமும் கலந்த நிறமும், வால் நுனியில் வெள்ளையும் தென்படும். கழுத்திலோ, கழுத்தடியிலோ, கருத்த வளையோ, சிறிய சொக்கட்டான் பலகை போன்ற ஒரு குறியோ மணிப்புறாக்களுக்குண்டு. குரலிலிருந்தே புறாக்களுக்கும் மணிப்புறாக்களுக்கும் வித்தியாசம் சொல்லலாம். புறாக்கள் ஆழ்ந்த குரலில் பலத்துக் கூவும்—சில காட்டுப் புறாக்களின் குரல் புல்லாங்குழலின் ஓசை போலிருக்கும். மணிப்புறாக்கள் நீடித்து முனகுவது போல் சப்திக்கும். நமது நாட்டில் மிகச் சாதாரணமாகத் தென்படும் மூன்று வித மணிப்புறாக்களையும், வேறுபாடு விளங்க ஒரு மாடப்புறாவையும், கீழ்க்கண்ட சித்திரத்தில் வரைந்திருக்கிறது.



Little Brown Dove — Spotted Dove — Ring Dove
மணிப்புறாக்கள்

Blue Rock Pigeon
மாடப்புறா

காடுகளிலும், தோப்புகளிலும், மனித சமூகத்தை அடுத்துள்ள வெளிகளிலும் மணிப்புறாக்களைச் சகஜமாகக் காணலாம். சென்னையின் நெருக்கடியிலும் இப்பறவைகள் உண்டு. இங்கே, மரங்கள் கொண்ட தோட்டங்களில் 'புள்ளி மணிப்புறா' (Spotted Dove) வின் குரலைக் கேட்கலாம். இது 'க்ருக்-க்ருக்-க்ருக்-க்ரு-க்ரு-க்ரு-க்ரு' என்று கூவும். இதன் குரலை 'கப்-பல்-செட்-டி, கொடு, கொடு. கொடு' என்று அக்ஷரப்படுத்திச் சொல்லுவதுண்டு. இதை ஆதாரமாகக் கொண்டு. கப்பல் செட்டி ஏன் 'கொடு, கொடு. கொடு' என்று சொன்னான் என்பதை விளக்குமொரு கதையையும் நான் படித்திருக்கிறேன். கதையெழுதினவர் இந்த மணிப்புறாவைக் கண்டதில்லை!

இடை மத்தியான வேளையில் படுக்க அவகாசம் கிடைத்து, நித்திரை பற்றும் போது, சகஜமான சப்தங்கள் மங்கி, அதுகாறும் செவிகள் கேட்டிராத பல சிறு குரல்கள் நமக்குக் கேட்கும். தொலைவில் காக்கை கரவுவதும் சுற்று முற்றும் குருவிகளும் மற்றப் பறவைகளும் கூவுவதும் எல்லாம் தெளிவாகவும், அரைத் தூக்கத்திலிருக்கும் நமக்குக் கடின சப்தமற்று செவிகளுக்கு ஒருவித சுக பாவம் நிறைந்து கேட்கும். என்றேனும் இப்படிக் கேட்கக் கொடுத்து வைத்துக் கோடை காலத்தில் மத்தியானம் தூங்கியிருந்தால் மணிப்புறாக்களின் மிருதுவான குரலை நீங்கள் கேட்டிருக்கலாம்.

சில பறவைகளைச் சில இடங்களில் தான் பார்க்க முடியும். ஆற்றங்கரையோரத்துள்ள பட்சிகள் காடுகளில் சஞ்சரிக்காது; மலைச் சிகரங்களில் வசிக்கும் பட்சிகளைக் கடலையடுத்த சம நிலங்களில் காண்பதரிது. ஆனால் மணிப்புறாக்கள் எங்கும் வாழும். சிறுவகை ராஜாளிகளும், வல்லூறுகளும் மணிப்புறாக்களை வேட்டையாடும். பலவிதப் பட்சிகளும், கீரிப்பிள்ளைகளும், பாம்புகளும் அதிக உயரத்திலின்றிப் பகிரங்கமாகக் கட்டியுள்ள மணிப்புறாக் கூடுகளிலுள்ள முட்டைகளையும் குஞ்சுகளையும் சூறையாடும். இது போல் பல வாய்களுக்கு இரையாகியும் மணிப்புறாக்கள் செழித்திருப்பது விசித்திரமாகத் தோன்றலாம். வருஷம் முழுதும் இப்பறவைகள் சந்ததியைப் பெருக்க முயலுவதே இதற்குக் காரணம். வஸந்த காலத்தில் மணிப்புறாக்கள் ஜதை கூடி, கூடு கட்டி, முட்டை அடைகாப்பதைக் கவனிக்கலாம். பிறகு, பின் கோடைக் காலத்திலும், காற்றடிக்கும் காலத்திலும், கார்காலத்திலும், இளவேனிற் காலத்திலும் இவை ஜதை பிரியாது. மேலும் கூடு கட்டிக் குஞ்சு பொரிக்க யத்தனிப்பதைக் கவனிக்கலாம். சளைக்காத காதலைப் பகையும் கொலையும் என்ன தான் செய்யமுடியும்? கூடு கட்ட ஒரு சிறு மரமோ, செடியோ உள்ளவளவும், குச்சிகளுள்ளவளவும், மணிப்புறாக்கள் செழித்திருக்கும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

# பதில் எப்படி?

வேகமாக வந்துகொண்டிருந்தது ஒரு கார். தெருவில் ஓரமாகத்தான் அவன் போய்க்கொண்டிருந்தான். அப்படியிருந்தும் கார் அவன்மீது மோதி அவனைக் கீழே தள்ளி விட்டது. அவனுக்கு நல்ல காயம். தெருவில் ஜனங்கள் ஏராளமாகக் கூடி விட்டார்கள். விஷயம் போலீஸ் ஸ்டேஷனுக்கு எட்டியது. காரின் சொந்தக்காரர்மீது போலீஸார் வழக்குத் தொடுத்தார்கள்.

நீதிஸ்தலத்தில் அன்று இந்த வழக்கு விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. காரின் சொந்தக்காரருடைய வக்கீல் சண்டப் பிரசண்டமாகத் தம் கட்சிக்காரர் கார் ஓட்டுவதில் எவ்வளவு தேர்ச்சி பெற்றவர் என்பதைப் பற்றி விரிவாகச் சொல்லி வாதித்தார்.

"என் கட்சிக்காரரின் மீது தவறே கிடையாது. அவர் எப்பொழுதும் மிகவும் ஜாக்கிரதையாகக் கார் ஓட்டுவார். பதினைந்து வருஷகாலமாக ஒரு சின்ன விபத்துக்கூட ஏற்படாமல் அவர் கார் ஓட்டி வருகிறார் என்பதிலிருந்தே அவருடைய கார் ஓட்டும் திறமையை நன்றாய்த் தெரிந்து கொள்ளலாம். ஆகையினால் அவர் நிரபராதி!"

சர்க்கார் தரப்பு வக்கீல் இதற்கு என்ன பதில் சொல்லப் போகிறார் என்று எல்லோரும் ஆவலோடு எதிர்பார்த்தார்கள்.

சர்க்கார்தரப்பு வக்கீல் எழுந்தார். "அப்படியானால் எங்கள் கட்சிக்காரர் சொன்னதும் சரிதான் என்று படுகிறது. அவர் நாற்பது வருஷ காலமாக ஒரு சின்ன விபத்துக்கூட ஏற்படாமல் தெருவில் நடந்து வருகிறார் என்பதிலிருந்தே அவர் தெருவில் எவ்வளவு ஜாக்கிரதையாக நடப்பவர் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். ஆகையினால் அவர் நிரபராதி" என்று பளிச்சென்று பதில் கொடுத்தார்.

—விஜயம்


"ஓடி வாருங்கள்!"
குல்லாய் தேவையுள்ளவர்கள் ஓடி வாருங்கள்!
நில்லுங்கள்! குல்லாய் போட்டுக் கொள்ளுமுன் உங்களுக்கு மூளை இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ளுங்கள். குல்லாயை விட அதுதான் அவசியம்.
வரும்போது இருந்ததே 'எங்கே போய் விட்டது? தெரியவில்லையே!
—சாமா—

# வேண்டாத வீடு

தாபன்

குளத்து ஜலத்தைக் குடத்தில் மொகந்து இடுப்பில் வைத்துக்கொண்டு படிக்கட்டில் ஏறிவந்த செல்லம்மாள், "என்னவோ அம்மா! என் தலை சுற்றுகிறது; மயக்கமாய் வருகிறது. தூக்கமே பிடிக்கிறதில்லை. படுத்தால் என்னவெல்லாமோ பயங்கரச் சொப்பனங்கள்... என்ன செய் வேண்டியம்மா?" என்றாள்.

"ஐயோ பாவம்! உன்னைப் பார்த்தாலே பரிதாபமாய்த் தானிருக்கிறது. டாக்டரிடம் உடம்பைக் காண்பிக்கப் படாதோ? 'டானிக்' சாப்பிட்டால் நல்லது. துரும்பாய் மெலிந்து போய்விட்டாயே! இந்த ஊருக்கு வரும்போது இப்படியா யிருந்தாய்? வந்து இரண்டு மாதம் கூட ஆகவில்லையே!" என்றாள் சுந்தரி.

"ஆயிரம் 'டானிக்' சாப்பிட்டாச்சு. உடம்பு முழுதும் ஊசி குத்தியாச்சு. என்னவோ—என் தலைவிதி—நான் கஷ்டப்பட வேண்டிய நேரம்...அதைத்தான் சொல்ல வேண்டும் வேறு என்ன சொல்லுவது?" என்றாள் செல்லம்மாள் சலிப்புடன்.

அதுவரை இடுப்பில் குடத்தைச் சுமந்து கொண்டு நின்ற கோமதிப் பாட்டி 'டங்' என்று படிக்கட்டில் வைத்துவிட்டு அருகில் ஒரு எட்டு வந்து, "அம்மா, செல்வி! ஒரு பழைய காலத்துப் பைத்தியம் உளறுகிறதாக நினைத்தாலும் நினைத்துக் கொள். உன்னைப் பார்த்ததிலிருந்து என் மனசில் ஒரு பயம் தோன்றிவிட்டது. நான் சொல்லுவதைக் கேளு. நீ எத்தனை வைத்தியம் செய்தாலும் எத்தனை ஆயிரம் ஊசிகள் போட்டுக் கொண்டாலும் உன் உடம்பு தேறாது. ஆமாம், இது உடம்பைப் பற்றிய வியாதியே இல்லை!" என்றாள் அழுத்தம் திருத்தமாக.

"பின்னே என்னது சொல்லுங்களேன், பாட்டி!" என்று ஆவலுடன் கேட்டாள் செல்லம்மாள்.

கோமதிப் பாட்டி செல்லம்மாளின் கேள்விக்குச் சரியான பதில் அளிக்காமல் சுந்தரியின் காதுக்குள் ஏதோ மெதுவாகச் சொல்லவே சுந்தரி, "நானும் அப்படித்தான் நினைக்கிறேன்—நீங்களே அவளிடம் சொல்லுங்களேன், பாட்டி!" என்று கிழவியைக் கேட்டுக் கொண்டாள்.

"செல்வி! நான் சொல்கிறபடி செய். நீ இப்போது இருக்கும் வீட்டை உடனே காலி செய்துவிட வேண்டும். அது உனக்கு ஆகவே ஆகாது. விருத்தியில்லாத வீடு. அதில் ஒரு கருப்பு நடமாடுகின்றதாகக் கேள்வி. முன்னொரு காலத்தில் யாரோ ஒரு சுமங்கலி துர்மரணமடைந்த இடமாம். அப்படியானால் அந்த ஆவி அங்கே நிற்கத்தானே நிற்கும்? உன் முகத்தில் களையே இல்லாம லிருப்பதற்கும் உன் உடல் வற்றி வறண்டு சுக்காய் உலர்ந்து போய்க் கொண்டிருப்பதற்கும் அதுதான் காரணம்..." என்றாள் கோமதிப் பாட்டி அனுதாபத்துடன்.

"வீட்டைக் காலி செய்தால் மட்டும் போதுமா, பாட்டி? அந்தக் கருப்பு இவளை விட்டு அகல வேண்டாமா?" என்று கேட்டாள் சுந்தரி பயமும் சந்தேகமும் நிறைந்த குரலில்.

"அதற்கு எவ்வளவோ வழிகள் உண்டு. ஏன் செல்வி! உனக்கு அடிக்கடி நாவறட்சி ஏற்படுகிறதா?"

"ஆமாம்!"

"வெள்ளி செவ்வாய்க் கிழமைகளில் கை கால்கள் உளைச்சலும் அலுப்பும் அசதியும் அதிகமா யிருக்கிறதா?"

"அப்படித்தான் தோன்றுகிறது!"

"நல்ல தூக்கத்தில் நற நற வென்று பற்களைக் கடிக்கிறாயா?"

"நிச்சயமாகச் சொல்வதற்கில்லை' ஆனால் அடிக்கடி கெட்ட சொப்பனங்கள் தோன்றுகின்றன."

"பார்த்தாயா! அதே கோளாறுதான். சந்தேகமேயில்லை..."

## 2

குளத்திலிருந்து வீடு திரும்பும்போது செல்லம்மாள் கலவரம் அடைந்தவளாகக் காணப்பட்டாள்.

அரோஹரா அக்ரகாரத்திற்குச் செல்லம்மாள் புதுக் குடித்தனமாக அப்போது தான் முதன்முதலாக வந்திருந்தபோதிலும் அவள் கணவர் கணேசய்யருக்கு அந்த ஊர் புதிதே யல்ல. அவர் பிறந்து, வளர்ந்து, படித்து, வாழ்ந்து வந்த சொந்த வீடே அந்த அக்ரஹாரத்தில்தான் இருந்தது. வெளியூர்களில் சர்க்கார் அலுவல்களில் சஞ்சரித்த கணேசய்யர் கல்யாணம் செய்து கொண்டு குடும்பத்தை ஸ்தாபித்ததும் ஒவ்வொரு ஊரிலும் வீட்டுக்கு ஏற்பட்டுள்ள கிராக்கியைக் கண்டு மனம் பதைபதைத்துப் போனார். பெரிய பெரிய

ஆபீஸர்களை யெல்லாம் காக்காய் பிடித்துக் கடைசியில் தமது சொந்த ஊருக்கே ரெவின்யூ இன்ஸ்பெக்டராக மாற்றிக் கொண்டு வந்தார். பூர்வீகமான பெரிய வீடு; ஜலவசதி; வயல், தோட்டம், துரவு இவற்றையும் கவனித்துக் கொள்ளலாம். வீட்டு வாடகை வேறு மிச்சம் என்றெல்லாம் இம்மி விடாமல் கணக்குப் போட்டுப் பார்த்து மிகுந்த உற்சாகத்துடன் அந்த 'மல்லிகை விலாஸம்' என்ற தன் பழைய வீட்டில் குடி புகுந்தார். ஆயிரம் ரூபாய்க்கு மேல் செலவிட்டு அந்த வீட்டைப் பழுது பார்த்துத் தம் வசதிக்கேற்ப புதுப்பித்து அமைத்துக் கொண்டார்.

"வீட்டிலே கருப்பு நடமாடுகிறது" என்று செல்லம்மாள் சொல்லக் கேட்டதும் கணேசய்யர் விழுந்து விழுந்து சிரித்தார். "அடி அசடே. இந்த வீட்டிலிருப்பவர்கள் எல்லாருமே கருப்புதானே! உன் நிறம், என் நிறம், நம்ம வீட்டு எருமையின் நிறம் எல்லாமே அப்படித்தானே...!" என்று சொல்லிக் கொண்டே குலுங்கக் குலுங்கச் சிரித்துவிட்டு, "போடி, பைத்தியம்! நான் முப்பது வருஷமாக வாழ்ந்திருக்கிற வீட்டிலே ஏதோ பிரமாத குற்றம் காட்ட வந்து விட்டாயே!" என்றார்.

அன்று இரவு நடு ராத்திரியில் செல்லம்மாள் அயர்ந்த தூக்கத்தில் பிதற்றுவதும் "ஐயோ, அப்பா!" என்று அலறுவதும் கணேசய்யரின் மனத்தைச் சஞ்சலத்திலாழ்த்தி விட்டது. அவர் மனம் மாறிற்று.

அப்போது செல்லம்மாள் ஏழு மாத கர்ப்பிணி. அந்த நிலையில் ஆக்ஷமில்லாத அந்த வீட்டிலிருக்க கணேசய்யரின் மனம் இடம் கொடுக்கவில்லை. ஒரு வாரத்துக்குள் அந்த வீட்டைக் காலி செய்து எதிர் வரிசையிலுள்ள மாடி வீடொன்றை வாடகைக்கு அமர்த்தினார். தன் வீட்டை விட அது எவ்வளவோ சிறியதான போதிலும் வாடகை மட்டும் இருபது ரூபாய். இந்தச் சந்தர்ப்பத்தில் வாடகையைப் பொருட்படுத்தவில்லை அவர். அந்த வீட்டுக்கு உடனே குடி வந்தார்.

யாருக்காவது தனது பூர்வீக வீட்டை வாடகைக்கு வைத்துவிட வேண்டுமென்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தார் கணேசய்யர். ஆனால் அந்தக் கருப்பு நடமாடும் வீட்டுக்கு யார் வருவார்கள்? ஆகையினால் ஒருவருமே அந்த வீட்டை வாடகைக்குக் கேட்க அவரிடம் வரவில்லை.

கணேசய்யரது ஆபீஸுக்குப் புதிதாகப் டெபுடி தாசில்தார் ஒருவர் மாற்றி வந்தார். பெயர் சாம்பமூர்த்தி ஐயர். "அக்ரஹாரத்தில் எனக்கு ஒரு வீடு பார்த்துத் தாருங்கள்!" என்று கணேசய்யரைக் கேட்டுக் கொண்டார். "இதைவிட நல்ல சந்தர்ப்பம் எப்படி வாய்க்கப் போகிறது? ஊருக்குப் புதிதான சாம்பமூர்த்தி ஐயரை தன் பூர்வீக வீட்டில் குடியேற்றினார், கணேசய்யர். வாடகை இருபது ரூபாய் என்றதும் டெபுடி தாசில்தாருக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. "பூ! இவ்வளவுதானா வாடகை? இத்தனை பெரிய வீட்டுக்கு? சேலத்தில் நான் ஐம்பத்தைந்து ரூபாய் கொடுத்த வீடு இதில் கால் பங்குகூட இராதே!" என்று உள்ளம் பூரித்துப் போனார்.

"கிராமாந்தரம்தானே! வாடகை அவ்வளவு அதிகமில்லை" என்று சமாதானம் சொன்னார் கணேசய்யர். ஆனால் அவர் மனதுக்குள் மட்டும், "சும்மா வந்து குடியிருக்கக் கூட ஒருவனும் வரமாட்டானே. இவர் இருபது ரூபாய் கொடுப்பது நம் அதிர்ஷ்டமல்லவா? இந்த ஊர் வம்புக்காரிகள் இவர் காதில் வீட்டைப் பற்றி ஒன்றும் போட்டு வைக்கக் கூடாதே!' என்ற எண்ணம் தோன்றி உறுத்தலாயிற்று.

"கணேசய்யர்வாள்! வாஸ்தவமாகவே நான் மிகுந்த அதிர்ஷ்டசாலி. என்னை விட அதிர்ஷ்டசாலி என் மனைவி வஸந்தா. எந்த ஊருக்கு மாற்றிப் போனாலும் அவள் ஜாதக விசேஷம் என்னவென்றால் கல்யா




மாமியார் :— என்னடி இது அதிசயமா இருக்கு, நீ செய்கிற காரியம்? விறகைக் கொண்டு போய் அடுப்பில் வைத்து எரிய விடுகிறாயே? விறகு என்ன விலை விற்கிறது, தெரியுமா? அடுப்பில் வைத்தால் கட்டுபடியாகுமா?



"என்ன ஸார்! உங்கள் முகம் ரொம்ப வாட்டமா இருக்கிறதே, ஏன்?"

"இரண்டு மூன்று நாளாய் இரவு தூக்கமே கிடையாது. வீட்டுக்காரன் வீட்டைக் காலி பண்ணச் சொல்லி நோட்டீஸ் கொடுத்துவிட்டான்."

"இதற்காகவா தூக்கமில்லாமல் இருந்தீர்கள்? உடனே என்னிடம் வந்து ஒரு வார்த்தை சொல்லி இருக்கப்படாதா?"

"உங்களிடம் சொல்லி இருந்தால் வீடு கொடுத்து இருப்பீர்களா, என்ன?"

"இல்லை, தூக்கத்துக்கு நல்ல மருந்து என்னிடம் இருக்கிறது. அதை நிச்சயமாய் உங்களுக்குக் கொடுத்திருப்பேன்!"

ணம், பிரசவம் முதலிய சகலத்துக்கும் சௌகரியமான வீடாகவே எங்களுக்கு அமைந்துவிடுகிறது. வஸந்தாவுக்கு இது தான் மாதம். ஊரிலேயே அவள் இருக்கட்டு மென்றிருந்தேன். இத்தனை சௌகரியமான வீடு கிடைத்துவிட்டதோ இல்லையோ! என் மனைவியை இங்கேயே பிரசவத்துக்கு அழைத்து வந்துவிடப் போகிறேன். இந்தத் தடவை 'டெலிவரி' இந்த வீட்டில்தான்!" என்று பெருமிதத்துடன் கூறினார் சாம்பமூர்த்தி ஐயர்.

கணேசய்யரின் உள் மனது துணுக்குற்றது. ஆயினும் வெளியில் ஒன்றும் காட்டிக் கொள்ளவில்லை.

ஒரு வாரமாயிற்று. புது வீட்டுக்குக் குடியேறின பின் செல்லம்மாள் சௌகரியமாயிருப்பதைக் கண்டு மனம் பூரித்தார் கணேசய்யர். ஒரு நாள் இரவு அவளுக்கு மறுபடியும் உடல் நலம் குன்றியது. இடுப்பு வலி வந்து ஏழு மாதத்தில் கரு சிதைந்து போயிற்று. இந்த எதிர்பாராத சம்பவத்தால் மனம் தளர்ந்துபோன போதிலும், 'இந்த மட்டிலும் செல்லம்மாள் பிழைத்து எழுந்தாளே, அது நம் பூஜா பலன்தான்! அந்த வீட்டில் கொஞ்ச நாள் தங்கியதுதான் இந்தக் கரு சிதைவுக்குக் காரணம். சீக்கிரம் வீட்டுக்குப் பரிகாரங்கள் செய்ய வேண்டும். செல்லம்மாள் உடல் நலத்தையும் மாந்திரீகர்களைக் கொண்டு கவனித்தாக வேண்டும்' என்று தன்னைத் தானே தேறுதல் செய்து கொண்டார் கணேசய்யர். செல்லம்மாளைப் பார்க்க வந்த கோமதிப் பாட்டியும் அதைத்தான் சொன்னாள். "அந்த வீட்டுக் கோளாறுதானப்பா இவளைப் பிடித்திருக்கிறது. கருக்க ரக்ஷை கட்டிவிடு" என்றும் புத்திமதி சொன்னாள்.

கணேசய்யரின் சிந்தனையில் இப்போது புதியதோர் பயம் கலந்து கொண்டது. அது டெபுடி தாசில்தார் சாம்பமூர்த்தி ஐயரைப் பற்றிய கவலைதான். 'அநியாயமாக ஒரு அப்பாவி மனிதரைக் கோளாறு பிடித்த உன் வீட்டில் குடிவைத்த பாவம் உன்னை இலேசில் விடாது. அவர் மனைவியும் கர்ப்பிணி' என்று கணேசய்யரின் மனச் சாட்சி இடித்துக்கொண்டேயிருந்தது. வர வர விஷயம் முழுதும் அவர்களுக்கு எட்டாமல் போகாது. பின் நம் நிலைமை மோசமாகி விடும். அவரோ நம் மேலதிகாரி. நம்மைத் தொலைத்தே விடுவார்—இப்படியெல்லாம் யோசித்தார் கணேசய்யர். 'கேவலம் இருபது ரூபாய்க்கு ஆசைப்பட்டு உயிர்ப் பாவத்தை ஏற்காதே' என்று இடித்தது அவர் சிந்தை.

சாம்பமூர்த்தி ஐயரிடம் நேரில் சென்று விஷயத்தைச் சாங்கோபாங்கமாக எடுத்துச் சொல்லி மனம் விட்டுப் பேசி—அவருக்காக உடனடியாக வேறொரு வீடு பார்த்து அதில் அவரைக் குடியேற்றி விட வேண்டும் என்ற தீர்மானத்துடன் கணேசய்யர் வாசற்புறம் வந்தார்.

வாசல் பக்கம் நின்றுகொண்டிருந்தார் சாம்பமூர்த்தி ஐயர். எதிரே கணேசய்யர் வருவதைப்பார்த்ததும் அவர், "வாருங்கள்! வாருங்கள்! உள்ளே வாருங்கள்!" என்று அன்பும் உற்சாகமும் தொனிக்க உபசரித்து அழைத்தார்.

திகைப்புடன் நின்றார் கணேசய்யர். "பழமும் சீனியும் வாங்கிச் செல்லுங்கள். நேற்று இரவு எனக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறது. இதற்கு முந்தியது மூன்றும் பெண்கள். இன்னொரு நல்ல சேதி. தெரியுமா? இன்று தபாலில் எனக்குத் தாசில்தார் வேலைக்கு உத்தரவு வந்திருக்கிறது. எல்லாம் உங்கள் வீட்டுக்குக் குடி புகுந்த வேளைதான்!" என்று சந்தனத்தை அள்ளி கணேசய்யரின் தேகமெல்லாம் பூசி மகிழ்ந்தார் டெபுடி தாசில்தார் சாம்பமூர்த்தி ஐயர்.


வின்கோலா
ஒரு சிறந்த டானிக்
விடாமின் "B" யுடன் கூடியது
A
SPW
PRODUCT
ஸ்டாண்டர்டு பார்மஸூடிகல் வொர்க்ஸ் லிட்., சோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்: ஸ்டாண்டர்டு ப்ராடக்ட்ஸ் லிட்., 79 A & B, செம்புதாஸ் தெரு, மதராஸ்.


பனிகால
இருமல்களை
ஸிரோலின்
'ரோச்'சினால்
நிறுத்துங்கள்
அபாயமின்றி
உட்கொள்ளக்கூடிய
குடும்ப ஔஷதம்!
SIROLIN
'ROCHE'

Edited. Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Maders Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. No. M 4392